தாகூரின்

# கீதாஞ்சலி



செல்வி பதிப்பகம்

இதே பதிப்பு நாகூரில் இருக்கிறது.
இது V.R.M. செட்டியாருக்கு,

# கீதாஞ்சலி

ரவீந்திரநாத தாகூர்

தமிழாக்கம் :

வி. ஆர். எம். செட்டியார். பி. ஏ






காரைக்குடி

# ஆசிரியர் முன்னுரை

1929 ஜுன் 21 காலை 9 மணிக்கு * இந்தோ சைனுவில் சைகோன் துறை முகத்தில் வங்கக் கவிஞர் ரவீந்திரநாத தாகூர் கப்பலை விட்டு இறங்கி வரும்போது நான் ஆனந்தமாகக் கண்டு தரிசித்தேன். அவருடைய கவிதை வெறியை நான் நூல்களிலிருந்து படித்தறிந்தது மல்லா மல், நேரிலும் கேட்டு இன்புற்றிருக்கி றேன்; கவிஞரின் நீண்ட ஆங்கிலச் சொற்பொழிவையும் அவர் முன்னிலையில் இன்ப வெறியுடன் பெருங் கூட்டத்தில் மொழிபெயர்த்திருக்கிறேன்.

கவிதை எழில் நிறைந்த அவருடைய அகண்ட தோற்றத்தில் நான் மதிமயங்கி நின்றேன். அவருடைய கடலினும் பெரிய கண்கள், ஜோடிப்புருக்கள் போல கற்பனை யுலகில், பறந்து வட்டமிட்டு, இதயத்தில் புன்முறுவலுடன் பூத்து மலர்கின்ற மின்னல் நட்சத்திரங்களை ஆனந்தமாய் அள்ளி எறிந்து கொண்டிருக்கும். அவ ருடைய தந்த நிறமான உன்னதத் தோற்றம், கவிதையின் பொன் சிகரத்

---

* Saigon in Indochina.

தையே எடுத்துக் காட்டி நிற்கும்; அவ ருடைய வெள்ளிக் கிரணங்கள் நிறைந்த ஜோதி மண்டிய தாடியோ, சிந்தனை வெள் ளத்தில் அகண்ட நீர்வீழ்ச்சியையே படம் பிடித்துக் காட்டும். அவருடைய நீண்ட தந்தக் கைகள் வங்க மொழியில் விம்மிப் புரண்டு வருகின்ற சொல்லலைகளாகவே கைவீசிக் கொண்டு சிறகடிக்கும். அவர் இதயவெறியுடன் கம்பீரமாக சௌந்தர்யத் தீபம்போல் நடந்து செல்லும்போது, இறையொளியின் வெற்றிக் கொடியோ என்று நான் ஆழமாகச் சிந்திப்பதும் உண்டு; அவரே கவிதையின் தொனி விளக்கு!

அவர் தாய் மொழியான வங்க மொழி யில் தன் அநுபவத்தை யெல்லாம் கொட்டி வைத்திருக்கிறார். அவர் நூதனக் கவிஞர். சிறந்த சொற்பொழிவாளர், நாவலாசிரி யர், நாடகாசிரியர், கட்டுரையாளர், இசை மன்னர், தத்துவம் நிறைந்த சிந்தனை யாளர், நூதன ஓவியர்; பிறவியிலேயே கவிதையருளுடன் பிறந்து ஆனந்தமாகப் பாடிப் பாடி, தன் வாழ்க்கையில் நிகழ்ந்த இன்னல்களை யெல்லாம் மறந்தார்.

மனைவி, ஒரு மகள், ஒரு மகன்— மூவரும் இறந்ததும், சோகக் கடலில்

ஆழ்ந்தார்; நெஞ்சந் துடித்து, துன்பத் திவலைகளையும் அடியோடு துடைத்தெறியவே அவர் கீதாஞ்சலியை வங்க மொழியில் உன்னத மாசற்ற மனோபாவத்துடன் பாடி வைத்திருக்கிறார்: கீதாஞ்சலிப் பாடல்கள், வங்க மொழியில் கண்ணீரில் பூத்த கமலங்களாகவே திகழ்கின்றன, தொடர்ந்த இசை விருந்து.

உலகத்தில் அவர் ஒரு உயர்ந்த கவிஞராக விளங்க வேண்டுமானால், உலக மொழிகளில் கீதாஞ்சலியை மொழி பெயர்த்தால்தான், இந்த எண்ணம் நிறைவேறலாம். ஆதலால்,கீதாஞ்சலியை தாகூர் ஆங்கிலத்தில் அமைதியாக, கொஞ்சம் கொஞ்சமாக, மொழிபெயர்த்துக் கொண்டு வந்தார்; வங்க மூலத்தில் உள்ள இசை வெள்ளத்தை ஆங்கிலத்தில் அமைக்க முடியாவிடினும், கருத்தளவிலே பிழையின்றி ஆங்கிலத்திலே பெயர்த்து எழுதினார். ஆங்கில பாஷையும், புதுப் புதுக் கருத்துக்களை உண்டு ஜீரணித்து, புதுமை நிறைந்த மின்னல் மொழியாக மாறிவிட்டது. வாசனையை ஆனந்தமாய் அமைதியாய் அள்ளி வீசுகின்ற நவீன ஊதுவத்தி போல, ஆங்கில மொழியும் கவிஞர் கையில் மணம் பெற்றுப்

பொலிவுற்றது. ஆங்கில இலக்கியத் திற்கும், இந்த நூலால் ஒரு தனித்த எதிர்பாராத சிறப்பு வந்துவிட்டது என்று கூடச் சொல்லி விடலாம்.

ஓவிய நிபுணர் * ராதன்ஸ்டீனும் ஐரிஷ் கவிஞர் † ஏட்சும் கீதாஞ்சலி மொழி பெயர்ப்பைக் கண்டு வியந்து போற்றினர். இந்தக் கீதாஞ்சலியின் ஆங்கில மொழி பெயர்ப்பால் தாகூரின் புகழ் உலக முழுதும் வேகமாய்ப் பரவியது ; நோபல் வெகுமதி (Nobel prize) 8000 பவுன்கள் (ஒரு இலட்ச ரூபாய்களுக்கு மேல் மதிப் புள்ளது) 1913-ல் நமது கவிஞர் பெற்று, உலக மதிப்பில் உயர்ந்தார்.

கவிஞர் தாகூருக்கு; நோபெல் வெகுமதி கிடைத்தவுடன், உலகமே கவிஞரை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தது. புகழ் புயல் போல எங்கும் வீசியடித்தது. கவிஞனுக்கு வேண் டிய ஓய்வும் அமைதியும் இயற்கைத் தாக முந் தொலைந்துவிடுமோ என்று தாகூர் கவலையில் ஆழ்ந்தார். புகழின் சூறைக் காற்றைத் தாண்டிக் கவிஞர் தப்பி ஓடவே

---

* Rothenstein † W. B. Yeats

ஆர்வம் கொண்டார். பாடிப்பாடி பரவச மடைய வேண்டிய கவிஞன், தொடர்ந்த சொற்பொழிவுகள் நிகழ்த்த முடியுமா? பல வைபவங்களுக்குத் தலைமை தாங்கு வது என்றால் என்ன? தொண்டையைக் கிழித்துப் புண்ணாக்கிக் கொள்வதுதானே? வேறு என்ன? கவிதா சிருஷ்டிக்கும் வறண்ட பாலைவனச் சொற்பொழிவுக்கும் ஏதாவது நியாயமான தொடர்பு உண்டா? நண்பர்களே சொல்லுங்கள், சொல் லுங்கள்.

அவருடைய கவிதைகளில் நயமான நூல்களிலிருந்து நயமான பாடல்களையே ஆங்கிலத்தில் மொழிபெயர்த் திருக்கிறார். வங்க கீதாஞ்சலியிலிருந்து 51 பாடல்களும் [1] நைவேத்யம், [2] கேயம் என்ற இரண்டு நூல் களிலிருந்தும் 52 பாடல்களும் எடுத்து மொழிபெயர்த்து ஆங்கில கீதாஞ்சலியாக அமைத்தார்.

கீதாஞ்சலியில் உள்ள கருத்துக்கள் உபநிஷத்துக்களின் அடிப்படையான ஆழ்ந்த எதிரொலிகள் என்றாலும், இசைச் செல்வமாகச் சொந்த சிருஷ்டியாக, தாகூர்

---

1 Naivedya. 2 Kheya

தனி முறையில் அருமையாகப் பாடியிருக்கிருர் என்பதை யாராலும் மறக்க முடியாது.

தாகூர் ஆங்கிலத்தில் மிக நுட்பமாகவே மொழிபெயர்க்க முயன்றதுபோல, நானும் ஏதோ எனக்குத் தெரிந்த அளவு ஆங்கிலத்தில் உள்ள கவிஞரின் கருத்துக்களை நடைப் பொலிவுடன் தமிழாக்க முயன்று வெற்றி பெற்றிருக்கிறேன் என்று தான் எண்ணுகிறேன்.

தாகூர் ஆங்கிலத்தில் வசன காவிய நடையையே கையாண்டிருக்கிருர். நானும் அதையே பின்பற்றித் தமிழில் வசன காவிய நடையிலேயே எழுதியிருக்கிறேன். கவிதையின் உள்ளத் தீயை ஹிம்சையின்றி, வசன காவிய நடையில்தான் பிரதிபலிக்கச் செய்ய முடியும்; வசன காவிய நடையின் வெற்றியை, ஷெல்லியும், பிரான்சிஸ் தாம்சனும், டிகுவன்ஸீயும், ரஸ்கினும், ஓரளவு கார்லைலும், ஸ்வின்பர்னும் வற்புறுத்தியிருக்கிருர்கள். நமது தேசீயக் கவிஞர் சுப்ரமணிய பாரதியாரும், 'ஞான இரதம்' என்ற நூலிலும், 'காட்சி' என்ற சிந்தனைக் களஞ்சியத்திலும் வசன காவிய நடையின் அற்புதச் செல்வத்தையே விளக்கிக் காட்டியிருக்கிருர். வசன

காவிய நடையை விட்டுவிட்டு, வறண்ட உயிரற்ற எலும்பெடுத்த சாதாரண வசனத்தில் எழுதினுல் கீதாஞ்சலியின் எழில் மங்கிச் சாம்பி மறைந்தொழிந்துவிடும்.

கீதாஞ்சலி ஒரு அமர காவியம்; ஒவ்வோர் உண்மைப் பக்தனும், உண்மை அறிஞனும், உண்மைத் தியாகியும் இறைவனின் திருமலரடியில் வாடாத வற்ருத இன்பப் பேற்றை அடையலாம் என்பதைத் தாகூர் இந்த கீதாஞ்சலியில், அரிய இசைச் சித்திரங்களாகத் தீட்டியிருக்கிருர். இதய வீணையின் தந்திகள் அனந்தம்; அதன் ஒலிகள் அனந்த கோடி. அவ்வீணையிலிருந்து எழும் கீதகோபுரம் வான மண்டலத்தை அளாவி நிற்கும். கோபுரத்தின் உச்சியிலுள்ள ஜோதி, வையமெல்லாம் ஒளிக் கடலாகும்படி ஜொலிக்கும்! இத்தகைய கீத கோபுரங்களையே கீதாஞ்சலியில் பார்க்கலாம்.

காதல் பக்தியாக மலர்கிறது. பக்தி மிகுந்த கவிஞர், கவிதையால் இறைவனைப் பிடித்துக்கொண்டு, “அகப்பட்டுக் கொண்டாயா!” என்று ஆனந்தக் கூத்தாடுகிருர். பக்திக் காதலின் பனிமலர்களுக்குப் பதிலாக கீதங்களைக் கொண்டே கவிஞர் தம் இறைவனை இதில் அஞ்சலி செய்கிருர்.

ஒரு பாட்டைப் பார்ப்போம்: பாட்டு (67)

"நீயே ஆகாசம், நீயே கூடு—சௌந்தர்யமூர்த்தி! கூட்டினுள்ளிருக்கும் ஜீவன் என்னும் பறவையைச் சூழ்ந்து, உன் அருட்பெருக்கால் விதவிதமான வர்ணங்களும் நாதங்களும் வாசனைகளும் அமைத்திருக்கிறாய்.

"காலையாகிய கன்னி, பூமி தேவிக்குச் சூட்ட வேண்டி அழகென்னும் மலர் மாலையுடன் பொன் மயமான குடலையை வலக் கரத்தில் தாங்கிய வண்ணம் வந்து நிற்கிறாள்.

"அந்திமாலையில், ஆடு மாடுகளும் வீடு திரும்பிச் சென்ற பின், புல் நிறைந்த பல வெளிகளைக் கடந்து, சுவடு தெரியாத பல பாதைகளின் வழியே, சந்தியா தேவியும் வருகிறாள்; மேலைக் கடலிலிருந்து அவள் தன் பொற்குடத்தில் சாந்தி நீரை மொண்டு வந்து வையமெல்லாம் வீசுகிறாள்.

"ஆனால், ஜீவன் சிறகடித்துப் பறக்க வேண்டிய எல்லையற்ற வானவெளியோ, ஒளி மயமாகத் திகழ்கிறது. அங்கே பகலில்லை, இரவில்லை, உருவில்லை, நிற

மில்லை, ஒலிக்கின்ற சொல் ஒன்றுகூட இல்லை.''

ஆங்கிலம், ஸ்வீடிஷ், டேனிஷ், ஜெர்மன்,பிரெஞ்சு,இத்தாலியன்,ரஷியன், ஜெக், ஸ்பானிஷ், ஜிட்டிஷ், ஹீப்ரு, கிரீக், போர்ச்சுகீஸ், எஸ்டோனியன், ஹங்கேரியன், முதலிய உலக மொழிகளில் தாகூரின் கீதாஞ்சலி மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது; ஆனல் வங்க மூலத்தின் இசைப்புயலை ஒருவராலும் மொழிபெயர்க்கமுடியவில்லை.

அகண்ட உண்மைகள் அடங்கிய நமது தமிழ் மொழியைக் கற்றுக்கொள்ளவில்லையே என்று தாகூர் என்னிடம் வருந்திச் சொல்லியதுண்டு.

இந்தத் தமிழ் மொழி பெயர்ப்பில், கருத்தைத் தழுவியே மூலத்தின் உட்பொருளை விளக்கியிருக்கிறேன். தமிழ் மரபுக்கு இணங்கிய முறையில் இம்மொழி பெயர்ப்பை அமைக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், நான் ஓரளவு சுதந்திரம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

அறிஞர் இதை ஆதரிப்பர் என்பது என் நம்பிக்கை.

**25-4-1945 வி. ஆர். எம். செட்டியார் பி. ஏ.**

---

23—6—1929 மாலை 5 மணிக்கு சைகோன் தண்டாயுதபாணி கோயிலில் முருகானந்த வாசகசாலைமுதலாவது வருஷக்கொண்டாட்டத்தில் கவிஞர் தாகூர் தலைமை வகித்து நீண்ட சொற்பொழிவு நிகழ்த்திய போதும் 21—6—29ல் சைகோன் முனிசிபல் நாடக மாளிகையில் கவிஞர் பேசிய போதும், கவிஞர் ஆக்ஞைப்படி நானே தமிழ் மக்களுக்குப் பயன்படும்படியாக பிரசங்கத்தை மொழிபெயர்த்தேன். சைகோன் நகரத்தார்கள் (நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள்) விஸ்வ பாரதி சர்வகலாசாலை நிதிக்கு 2601 டாலர்கள் கவிஞரிடம் நன்கொடையாகக் கொடுத்து உதவினர்கள்; அப்போதுள்ள எக்ஸ்சேஞ்சு (Exchange) விலைக்கு ரூ. 3500 ஆகும்.

## கீதாஞ்சலி

இறைவ! என்னை முடிவற்ற நிலையில் சிருஷ்டித்திருக்கின்றாய். அதுவே நினது இச்சை, இந்த மண் பாண்டத்தை அடிக்கடி காலி செய்து புத்துயிர் நிறைக்கின்றாய்.

இச்சிறிய வேய்ங்குழலை கையிலேந்தி நீ காடு மலையெல்லாம் கடந்து செல்கிறாய். போகுமிடமெல்லாம் குழல்ஊதி நவநவமான அமுத கீதங்களை அள்ளிச் சொரிகின்றாய்.

சாகா வரமளிக்கும் நின் கரம் தீண்டியதும், என் ஏழை உள்ளம் இன்பத்தின் எல்லை தாண்டி நின் வண்மையைப் பாட ஆரம்பிக்கிறது.

என் சின்னஞ்சிறு கைகள் நிரம்பி வழியும்படி நீ அரிய பல கொடைகள் அருள்

கின்றாய். யுகம் யுகமாக நின் கொடைகள் கருணைப் பிரவாகமாய்க் குவிந்து பெருகு கின்றன, ஆயினும் நான் இன்னும் குறை யிரந்து நிற்கின்றேன்.

2

என்னைப் பாடும்படி நினது ஆக்ஞை பிறக்கும்போது, எனது இதயம் கர்வம் கொண்டு மகிழ்ந்து வெடிக்கும் போல் தெரிகிறது; நினது முகத்தை நான் பார்க் கின்றேன், எனது கண்களில் நீர்த்துளி கள் நிறைகின்றன.

எனது வாழ்வின் ஹிம்சையும் அபசுரங் களுங் கலந்து உருகி ஒரு இனிய இன்னி சையாக ஒலிக்கின்றன—ஒரு ஆனந்த மான பறவை கடலைத் தாண்டிப் பறந்து செல்லுவதுபோல், எனது அருட் சிந்தனை சிறகடிக்கின்றது.

நான் பாடும்போது நினது உள்ளம் மகிழ்வெய்தும் என்பதை நான் உணர் வேன். நினது அருட் சந்நிதியில் நான் ஒரு பாடகனுகவே தோன்றுகிறேன்.

தீண்டமுடியாத நினது பாதத்தை எனது பாட்டின் விரிந்த சிறகின் இதழால் நான் தொட்டு இன்புறுகிறேன் ;

பாடிய இன்பத்தில் மயங்கி என்னை மறந்து, எனது தலைவனாகிய உன்னை எனது நண்பன் என அழைக்கின்றேன்.

3

எனது ஞானகுருவே! நீ எப்படிப் பாடுகின்றாய் என்பதை நான் அறிய முடியவில்லை. நினது பாட்டினை, எப்போதும் நான் அமைதியான ஆச்சரியத்தில் மூழ்கிக் கேட்டு இன்புறுகிறேன்.

நினது கீதத்தின் ஒளி, உலக முழுதும் ஜோதி பரப்பி விடுகின்றது; நினது கீதத்தின் உயிர்க்காற்று விண்ணை நிறைக்கின்றது; உனது தெய்விக கீதவோடை, கற்பாறைகளைத் துளைத்துக்கொண்டு சுழன்றோடுகிறது.

எனது இதயம் நினது கீதத்தில் கலக்க அவாவுகின்றது; நான் பேசுவேன்; ஆனால் பேச்சுப் பாட்டாகப் பெருக்கெடுக்கவில்லையே! ஐயோ, தோற்றேன், தோற்றேன்! ஆ, எனது இதயம் நினது கீதத்தின் முடிவற்ற வலையில் சிக்குண்டது. எனது ஞானகுருவே!

4

எனது உயிரின் உயிரே, எனது உடல் முழுதும் நினது ஜீவியஸ்பரிசம்பரவியிருப்

பதை அறிந்து எனது உடலை எக்காலமும் சுத்தமாய் வைத்துக்கொள்ள முயல்வேன்.

என்மனதில் பகுத்தறிவெனும் ஒளியைத் தூண்டிய உண்மையும் நீயே, ஆதலால் எனது சிந்தனையினின்று சகல தீமைகளையும் விலக்கி, அன்பு அரும்பிவர முயல்வேன் ; எனது இதயத்தில் கோயில் கொண்டிருக்கும் நின்னை நான் நன்கு அறிவேன்.

எனது செயலை விரிக்க வலிமை யளிக்கும் நின்னை, எனது செயலில் வெளியாக்க முயல்வேன்.

5

உனக்கருகில் ஒரு நிமிஷம் தங்கக் கருணை காட்டுவாயாக! என் கை வேலையை நான் பின்னால் முடித்துக் கொள்ளுகிறேன்.

நினது முகம் மறைந்தால் எனது இதயம் ஓய்வற்றுத் துடிக்கின்றது. வேலைக் கடலில் எனது வேலையும் முடிவுறாமல் திகைக்கின்றது. இன்று என் ஜன்னலின் முன், கோடை பெரு மூச்சிடுகிறது, குழம்பி ஒலிக்கிறது, வண்டுகள் பூந்தோட்டத்தில் ரீங்காரமிடுகின்றன.

இந்த வழிந்தோடும் அமைதியில் நின்னைத் தரிசித்து எனது வாழ்வை அர்ப்பணிக்க இதுவே நல்ல நேரம்.

6

இந்தச் சிறு பூவைப் பறித்து எடுத்துக்கொள்! தாமதியாதே, அது வாடி மண்ணில் விழுந்து மறையும் என்று அஞ்சுகிறேன்.

நினது மாலையில் அதற்கு ஒரு இடம் அமையாவிடினும், நினது கையால் கிள்ளி எடுத்துக்கொள்; அதில் ஓர் துக்க ஸ்பரிசம் அமைந்துள்ளது. நான் அதை அர்ப்பணிக்கு முன், இன்றைய தினம் முடிந்து விடுமோ என்று கவலையுறுகிறேன்.

அதனுடைய வர்ணம் ஆழமில்லாவிடினும், அதனுடைய வாசனை மங்கியிருந்த போதிலும், இப்போதே காலத்தை இழந்து விடாமல், இந்தப் பூவைக் கிள்ளி நினது பணிக்கு அமைத்துக் கொள்ளுக!

7

எனது கவி அவளுடைய அணிகளைக் கழற்றி வைத்து விட்டாள். ஆடையிலும் அலங்காரத்திலும், அவள் கர்வங்கொள்ள

வில்லை. அணிகள் நம்முடைய ஒற்றுமை யைக் குலைக்கும், உனக்கும் எனக்கும் மத்தியில் வந்து ஓசையிட்டு நினது ரகஸ்யத்தை மூழ்கடித்து விடும். நினது பார்வையில், எனது காவியப்பெருமை வெட்கி நாணுகிறது. ஏ கவியரசே! நினது திருமலரடியில் நான் உட்கார்ந்திருக்கிறேன். எனது வாழ்வை நாணற்குழல் போல் நேராக அமைத்து அதில் நாத ஒலி பெய்தருள்வயாக!

8

ஆடையால் அலங்கரிக்கப்பட்ட குழந்தை கழுத்தில் தொங்கும் நகைச் சங்கிலியால் கட்டுண்டு, விளையாட்டின் சுதந்திர இன்பத்தை 'இழக்கின்றது; அதன் ஆடையே படிக்குப்படிபெருந் தடையாக வளர்கிறது.

தூசியில் ஆடை மாசடையுமோவென்று குழந்தை கவலையுற்று, உலக இன்பத்தை அனுபவிக்கப் பின் வாங்குகிறது.

அன்னையே! நகையே விலங்கு, மண்ணில் இன்பமளிக்கும் தூசியை நான் பெற முடியாது, உலகப் பெருவாழ்வில் நுழையும் உரிமையையும் இழக்கின்றேன்.

9

ஏ, மதியிழந்தவனே! உன்னையே உன் தோளின்மேல் ஏன் தூக்கிச் சுமக்கின்றாய்! ஏ, பிச்சைக்காரனே, உனது கதவண்டை ஏன் பிச்சை கேட்கின்றாய்?

சுமையின் பொறுப்பை ஏற்றுக் கொள்பவனிடம் உனது கவலையை விட்டுவிடு; வருந்தித் திரும்பிப் பார்க்காதே. உனது ஆசை உனது உள்ஒளியை அணைக்கிறது. அது சுத்தமற்ற நிலை. அருட் காதலில் விளையும் கொடைகளையே அன்புடன் ஏற்றுக்கொள்!

10

உனது பாத கமலங்களுக்கு ஏற்ற பொன்மணை இங்கே இருக்கிறது. ஆனால் பாதங்களை இங்கே காணவில்லை. தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோருடைய குடிசைகளிலே உன்திருவடிகள் தங்குகின்றன.

நான் உனக்குச் செய்யும் பணி அவ்வளவு தாழ்ந்த ஆழத்தில் கலக்கவில்லை. அங்கமெலாம் வளைந்து நான் பணிந்து பணிந்து பார்த்தாலும், தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே விளங்கும் உன் சேவடிக்கொழுந்து வரை, அவ்வளவு தாழ்வாகப் பணிய முடியவில்லை.

தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே கந்தை உடுத்தித்திரியும் நின் கழலிணைச் செருக்குடையார் எந்நாளும் சேரவே முடியாது.

தீனர், திக்கற்றவர், தாழ்ந்தோரிடையே நாதியற்றவர்க்கு நாதியாய், ஏழை பங்காளனாய் நீ திரிந்து உலவும் இடத்தைச் சேர்வதற்கு, எது வழி என்று அறியாமல் என் இதயம் இடர்ப்படுகின்றது.

11

ஜபமாலை உருட்டுவதை விட்டுவிடு! மந்திரமும் தந்திரமும் ஆடலும் பாடலும் அவனைக் காட்டமாட்டா! தாளிட்ட அடைபட்ட கோயிலின் இருளடைந்த மூலையில் யாரைப் பூசிக்கின்றாய்?கண்ணைத் திறந்து, உன் கடவுள் உன் முன்னிலையில் இல்லையென அறிந்துகொள்!

கடினமான தரையில் ஏர் கட்டி உழுவாரிடமும், சாலை அமைக்கச் சரளைக்கல் உடைப்பாரிடமும் அவன் இருக்கிறான். அவர்களுடன் அவன் மழையில் நனைகிறான், வெய்யிலில் உலர்கிறான். அவன் ஆடையில் தூசி படிந்திருக்கிறது. உன் காஷாயத்தைக் களைந்தெறி; அவனைப் போலவே நீயும் புழுதியில் இறங்கிவா!

விடுதலை? எங்கிருந்து விடுதலை கிடைக்கும்? நம் ஆண்டவனே நம் மீது அருள் சுரந்து சிருஷ்டித் தளைகளை தன் மேனியில் பூண்டிருக்கிறான்; என்றும் நம்மை விட்டுப் பிரியமுடியாமல் அவன் இணைக்கப் பட்டிருக்கிறான்.

பூவையும் நறும்புகையையும் உன் பூசையையும் விட்டு வெளியே வா! உன் ஆடை கிழிந்து அழுக்கடைந்தால்என்ன? நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்து, நின் ஈசனைக் கண்டுகொள்!

12

நேரம் பறக்கிறது, வழியோ நெடுந் தூரம், என் யாத்திரைக்கு ஒரு முடிவில்லை. ஆதி முதல் தோன்றிய சோதிக்கதிர் ஒன்றில் நான் வெளிவந்தேன். வனந் தரங்கள் போன்ற எத்தனையோ உலகங்களைக் கடந்து, பல நட்சத்திர மண்டலங்களின் வழியே நான் யாத்திரை செய்தேன். எனக்கு வெகு தொலைவிலுள்ள பாதையே உனக்கு மிக அருகே உள்ளது. திக்குத் திசை தெரியாமல் வளைந்து வளைந்து செல்லும் முயற்சியே, ஒரு கீதம்போல் தெளிவாயுள்ள தெய்வீகப் பாதையில் சேர்க்கிறது.

யாத்ரிகன் பக்கத்து வீடெல்லாம் தட்டிப் பார்த்த பிறகே தன் வீட்டை அடைகிறான். அதுபோல் உன் இதயக் கோயிலை அடைய பல வெளியுலகங்களைத் தாண்டி அலைய வேண்டியிருக்கிறது.

என் கண்கள் உன்னைத் திசை திசையாகத் துருவிப்பார்த்தும் காணமுடியாமல் நான் கண்களை மூடினேன்; 'இதோ இருக்கிறாய்!' என்று சிக்கெனப் பிடித்துக் கொண்டேன்.

'எங்கே எங்கே?' என்று ஓலமிட்டுப் பெருக்கிய என் கண்ணீரெல்லாம் ஆயிரம் ஓடைகளாகப் பெருகி, 'நானே உண்மை!' என்ற பெருவெள்ளத்தோடு சேர்ந்து உலகைப் பிரளயமாக்குகிறது.

13

நான் பாடவந்த பாட்டை இன்று வரை பாடவில்லை. எனது யாழிலே சுருதி கூட்டுவதிலேயே என் காலமெல்லாம் கழிந்து விட்டது.

இன்னும் காலம் வரவில்லை. சொற்கள் சரியாக அமையவில்லை; ஆர்வத்தால் என் இதயத்தில் மட்டும் வேதனை இருந்து கொண்டே இருக்கிறது.

மலர் இன்னும் இதழ் விரியவில்லை; தென்றல் மட்டும் ஆர்வத்துடன் அருகே வீசிக்கொண்டிருக்கிறது.

அவன் முகத்தை நான் கண்டதில்லை, குரலையும் கேட்டதில்லை; வீதியில் எனது வீட்டின் முன் அவன் அமைதியாக நடந்து சென்ற காலடி ஓசையை மட்டுமே கேட்டிருக்கிறேன்.

அவன் அமர்வதற்காகத் தரைமீது ரத்தினக் கம்பளம் விரிப்பதிலேயே நாள் முழுதும் கழிந்து விட்டது; ஆனல் இன்னும் விளக்கேற்றவில்லை, எங்ஙனம் அவனை வீட்டினுள் அழைப்பேன்!

கண்குளிர அவனைக் காணலாகும் என்றே நம்பி வாழ்கிறேன்; ஆனல் காண்பது எப்பொழுதோ!

14

என் ஆசைகள் அனந்தம், என் அழுகை இரங்கத்தக்கது. ஆயினும் எதையும் கொடுக்க மறுத்து நீ எப்பொழுதும் என்னைக் காத்து நிற்கிருய். உன் மாருத கருணை என் வாழ்க்கையின் ஊடும் பாவுமாய்ப் பின்னி விளங்குகிறது.

நான் கேளாதிருக்கும் போதே உன் அரும் பெரும் கொடைகளை நல்கி, நாளுக்கு நாள் அவைகளுக்கு நான் தகுந்த கலமாக விளங்க அருள்கிறாய்; இந்த வானமும் பேரொளியும், இவ்வுடலும் இதில் இலங்கும் உயிரும் உள்ளமும் அளித்து, பேராசைச் சூறையின் பிடியினின்றும் என்னைக் காத்து நிற்கின்றாய்.

சோம்பலுடன் சோர்ந்து நான் சுணங்கிக் கிடப்பதுண்டு, விழித்தெழுந்து வேகமாய் என் லட்சியத்தை வெறிகொண்டு தேடுவதுண்டு; நீயோ கொடுமையுடன், என் எதிரில் புலப்படாது, மறைந்து ஒளிகிறாய்.

சரணடைந்த போதெல்லாம் என்னை நீ விலக்குதலால், நிலையற்ற ஆசை வலைக் கண்களில் விழாது காத்து நாள்தோறும் என்னை நீ உன் பெருமைக்கு ஏற்ற பொருளாக்குகிறாய்.

15

பண்ணால் உனக்குப் பாடல்கள் பாடவே நான் வந்திருக்கிறேன். உன்னுடைய இந்த மணி மண்டபத்தில் எனக்கும் ஒரு மூலையில் இடமுண்டு.

உனது உலகில் எனக்கு வேலையில்லை. வறிதான என் உயிர், பயனற்ற இசைகளாய்ப் பாடி அரற்றுவதல்லாமல், வேறொன்றும் அறியாது.

நள்ளிருட் கோயிலில் நின்னைப் பூசிக்கும் நேரம் நண்ணியதும், நின் சந்நிதியில் நின்று பாடும்படி என்னைப் பணிப்பாயாக!

காலை மென் காற்றில் தங்கயாழ் இசை மிழற்றும் போது நின் சமூகத்தில் தோன்றும்படி என்னை நீ கட்டளையிடுவாய்—அதுவே என் பாக்கியம்!

16

வையமெங்கும் திருவிழா, இதற்கு நானும் இங்கு வந்துள்ளேன். இது என் ஜீவன் பெற்ற பெரும் பேறு, இங்கு கண்ணாரப் பலவற்றைக் கண்டு கொண்டேன், காதாரப் பலவற்றைக் கேட்டறிந்தேன்.

விழாவில் வீணை வாசிப்பதே என்வேலை. என்னால் முடிந்தவரை வாசித்து விட்டேன். இனியாவது உட்புகுந்து நின் முகத்தைக் கண்குளிரக் காண்பேனோ? மோனமாக நின்னை வழிபடும் காலமும் வந்ததோ என்று உன்னை வினவுகிறேன்.

17

அன்பு முதிர்ந்து அவன் கைகளில் என்னை ஒப்படைக்கவே நான் காத்திருக்கிறேன். இதனாலேயே பல பிழைகள் நேர்ந்தன. காலமும் தாழ்ந்து போய் விட்டது.

மக்கள் தங்கள் நீதி நியமங்கள் கொண்டு என்னைப் பிணித்துவிட முற்படுகின்றனர்; நானோ என்றுமே பிடி கொடாது தப்பியே வருகிறேன். ஏனெனில் அன்பு முதிர்ந்து அவன் கைகளில் என்னை ஒப்படைக்கவே நான் காத்திருக்கிறேன்.

கவலையில்லாத ஜன்மமென்று கண்டவர்கள் என்னை ஏசுவார்கள்; அவர்கள் நிந்தை மொழி சரி என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

சந்தை கலைகிறது. வேலையெல்லாம் தீர்ந்துவிட்டது. என்னை அழைக்க வந்தவர் அனைவரும் வெகுண்டு திரும்பிச் சென்றனர். அன்பு முதிர்ந்து அவன் கைகளில் என்னை ஒப்படைக்கவே நான் காத்திருக்கிறேன்.

18

மேகங்கள் குவிந்து வானம் இருள் கிறது. என் இன்பமே! என்னை ஏன் வீட்டுக்கு வெளியே தனிமையில் நிறுத்தி வைக்கின்றாய் ?

பகல் வேளையின் அவசர வேலைகளில், நான் ஜன நெருக்கடியில் இருக்கிறேன். ஆனால் இந்த இருண்ட நிசப்தமான நாளில், உன் வருகைக்காகவே காத்திருக் கிறேன்.

உன் முகத்தை நீ காட்டாமல், என்னைத் தனியே விட்டுவிட்டால், இந்த நீண்ட மழைப் பொழுதை எப்படிக் கழிப் பது என்று தயங்கி நிற்கின்றேன்.

நெடுந்தொலைவில் இருளடர்ந்த வானத்தை நோக்கிய வண்ணமே நிற்கி றேன். ஓய்வில்லாது வீசும் காற்றுடன் என் இதயமும் அழுது புலம்பி அலைந்து திரிகிறது.

19

நீ பேசாவிடின், என் இதயம் உனது அமைதியால் நிறைந்து பொறுமையடை யும். கண்மூடா இரவு, பொறுமையால் தலை கவிழ்ந்து, தாரகைகள் மூலம் நுட்ப

மாகக் கவனித்து நிற்பதுபோல், நானும் தயங்கியே காத்திருப்பேன்.

காலைக் கதிர் உதிப்பது திண்ணம், காரிருள் கழிவதும் திண்ணம், வானத்தின் வழியாக நினது இசைக்குரல் ஒளி மயமான பொன் ஓடைகளாகப் பெருக்கெடுத்துப் பாய்வதும் திண்ணம்.

அப்போது, என் வன்னப்பறவைகளின் கூடுகள் ஒவ்வொன்றிலும் நின் சொற்கள் கீதங்களாகச் சிறகு விரித்துப் பறக்கும். நின் இசையின்பம் என் சோலைகள் தோறும் மலர் வனமாய் மலர்ந்து நிற்கும்.

20

தாமரை மலர்ந்த அன்று, ஐயோ, என் மனம் அலைந்து திரிந்தது, நான் அதை அறியவில்லை.

என் குடலை காலி, அந்தப் புஷ்பமோ தேடுவாரற்றுக் கிடந்தது.

சில சமயங்களில் ஒரு சோகம் என்னைக் கவிந்துகொள்ளும், நான் என் கனவிலிருந்து திடுக்கிட்டு எழுவேன், தென்றலுடன் கலந்து ஓர் அதிசய நறுமணம் கமழ்வதை உணர்வேன்.

இந்த நூதன இனிமையினின்று எனது இதயம் ஆர்வத்தால் விம்மியது; கோடையின் பூர்த்திக் குரலாக அது தோன்றிற்று.

அது அவ்வளவு அருகே யுள்ளது! என்றும், அது என்னுடையதுதான் என்றும். இந்தப்பூரண இனிமைஎனது இதயத்தின் ஆழத்திலேயே மலர்ந்தது என்றும் அப்பொழுதே நான் உணரவில்லை.

21

எனது தோணியைச் செலுத்த வேண்டும். சோம்பலாகக் கடற்கரையில் நேரமெல்லாம் தொலைகிறது—ஐயோ, நான் என் செய்வேன் !

வசந்தம் புஷ்பித்து விடைபெற்றுக் கொண்டது. நானோ, வாடி வதங்கிய மலர்க் குப்பையைச் சுமந்துகொண்டு காத்து நிற்கிறேன்.

அலைகள் கர்ஜித்து விம்முகின்றன, கரை அருகே நிழல் நிறைந்த பாதையில், பழுத்த இலைகள் ஆடி உதிர்கின்றன.

என்ன வெறுமை! வெறும் வெளியில் என்னதான் பார்க்கிறாய்! மறு கரையினின்று மிதந்துவரும் இன்னோசைகள்

காற்றில் கலந்து உனக்கு உணர்ச்சி ஊட்டவில்லையா ?

22

ஆடி மாத அடை மழையில், ஆழ்ந்த நிழல்களின் ஊடே யாரும் அறியாவண்ணம், இருள்போல், தன்னந் தனியாய், அமைதியாக நீ நடந்து செல்கிருய்.

இன்று காலை நேரம் கண்மூடி அமர்ந்திருக்கிறது. கீழ்க்காற்றின் உரத்த அழைப்பை அது கவனிக்கவில்லை, என்றும் விழிப்புடைய நீல விசும்பினிடையே இருண்ட திரை பரவி யிருக்கிறது.

காடுகளின் பாடல்கள் ஓய்ந்தன, ஒவ்வொரு வீட்டிலும் கதவுகள் மூடிக்கிடக்கின்றன. இந்த சஞ்சாரமற்ற பாழடைந்த வீதியில் நீயே தனியாய் நடந்து செல்கிருய். எனக்குரிய ஒரே நண்பா ! எனது ஆசைக் கனியே, என் வீட்டின் கதவுகள் திறந்திருக்கின்றன — ஒரு கனவுபோல் தாண்டிச் சென்றுவிடாதே.

23

எனது அருமை நண்பா ! உனது இன்ப யாத்திரையில், இந்தப் புயல் வீசும் இரு

ளில், நீ வெளியே கிளம்பி விட்டாயா? நம்பிக்கை இழந்தவன் அல்லற் படுவது போல், ஆகாயம் ஊளையிடுகின்றது.

இன்றிரவு நான் தூங்கவில்லை. அடிக்கடி நான் கதவைத் திறந்து வெளி இருளைப் பார்க்கிறேன். நண்பா, நீ எந்த வழியாக என்னை நாடி வருகிறாய்? இருட்பிழம்பான எந்த ஆற்றின் கரை வழியாக வருகிறாய்? சினந்து குமுறும் வனாந்தரத்தில் தொலைவிலுள்ள எந்தப் பாதை வழியாக வருகிறாய்? ஆழம் காணாத எந்த அந்தகாரத்தின் ஊடாக வருகிறாய்?

24

பகல் முடிந்ததும், பறவைகளின் பாடல் அடங்கியதும், காற்றுக் களைத்து அயர்ந்ததும், கனத்த இருள் திரையை என்மேல் வீசி மூடிவிடு! அந்தி நேரத்தில் தளர்ந்து சாய்ந்த தாமரை மலரின் இதழ்களை மிருதுவாக மூடிவைப்பது போல், நீ பூமியை யெங்கும் உறக்கப் போர்வையில் மூடிவைப்பது போல், என் மேலும் இருள் திரையை கெட்டியாய் வீசி மூடிவிடு!

பிரயாணியின் பை, யாத்திரை முடியுமுன் காலியாகிறது; அவன் ஆடை கிழிந்து தூசி படிந்திருக்கிறது; அவன்

வலியிழந்து களைத்துக் கிடக்கிறான் ; அவனுடைய வெட்கத்தையும் வறுமையையும் விலக்கி அன்பு நிறைந்த உன் இருளின் அடியிலே, ஒரு புஷ்பத்தைப் போல் அவனும் புத்துயிர் பெறும்படி அருள் புரிவாயாக !

25

சோர்ந்துபோய் இரவில் துடிக்காது, தூக்கத்தில் ஆழ்ந்து, உன்னையே நம்பி, நான் சாந்தியடையுமாறு அருள் புரிவாயாக. சக்தி தளர்ந்த நிலையில், உன்னைப் பூசிப்பதற்காக அற்பமான முறையில் ஆயத்தம் செய்யாதிருப்பேனாக.

பகலின் சடைவுற்ற கண்களுக்கு இரவின் திரையில் சாந்தி யளித்து, மீண்டும் விழிக்கும் பொழுது, புதுப் பார்வையில் புதிய இன்பம் தோன்றச் செய்வது நினது அருளேயாம்.

26

அவன் வந்து என் அருகில் அமர்ந்தான், ஆனால் நான் விழிக்கவில்லை. என்ன சாபக்கேடான தூக்கம்! என்ன பரிதாபம்!

இரவின் அமைதியில் அவன் வந்தான்; கையிலே யாழ் தாங்கி நின்ருன்; என் கனவுகளில் அதன் கீத ஒலிகள் எதிரொலித்தன.

ஐயோ! ஏன் எனது இரவுகள் எல்லாம் இப்படி வீணுகின்றன? எனது தூக்கத்தில் பிராண ஜோதியாய் விளங்குபவனை ஏன் நான் எப்பொழுதும் இழந்து நிற்கிறேன்?

27

ஒளி, ஒளி எங்கே யிருக்கிறது? ஆசையின் ஆர்வ நெருப்பால் அதைத் தூண்டு.

இதோ இருக்கிறது விளக்கு. ஆனல் அதில் ஒருபோதும் ஒளி சுடர் விடவில்லை —என் இதயமே, இதுவே உனது கதி!

சோகமாது உனது தலைவாயிலைத் தட்டுகிருள்; உன் இறைவன் விழித்திருக்கிருன்! என்றும் இரவின் இருளில் நீங்கள் வழக்கமாய்ச் சந்திக்கும் இடத்திற்கு அவன் உன்னை அழைக்கிருன் என்றும் சோகம் வந்து செய்தி கூறுகிறது.

மேகங்கள் விண்ணை மூடிக்கொண்டன. மழையும் ஓய்வற்றுப் பெய்கிறது, என்னுள் ஏதோ கிளர்கிறது, இது என்ன

என்று அறியேன்—இதன் பொருளேயும் நான் அறியேனே!

ஒரு நிமிஷ மின்னல், என் பார்வையில் இருளை மேலும் கெட்டியாய்த் திரையிடு கிறது ; இரவின் இசை அமுதம் என்னை அழைக்கும் இடம் தெரியாமல், என் இதயம் அலைந்து தேடுகிறது.

ஒளி, ஒளி எங்கே இருக்கிறது ? ஆசை யின் ஆர்வ நெருப்பால் அதைத் தூண்டு ! இடி இடிக்கிறது ; வெட்டவெளியில் ஓல மிடுகிறது காற்று. இரவு கருங்கல்போல் இருள் செறிந்துள்ளது. இருட்டிலே நேரம் வீணாய்க் கழிய வேண்டாம்.

காதல் விளக்கை உன் உயிர்ச்சுடரால் ஏற்றிவை.

28

இதயத் தடைகள் பிடிவாதத் தடைகள் ; தளைகளை முறிக்க முயலும் போது, எனது இதயம் வருந்துகிறது.

விடுதலையே எனது தேவை, ஆனால் நம்பி வாழவே, நான் வெட்க மடை கிறேன்.

உன்னிடம் மதிப்பரிய பெருஞ்செல்வம் உளது; நீயே எனக்கு உற்ற நண்பன்; ஆனல் இதை உறுதியாக உணர்ந்தும், என் அறையில் அடைந்திருக்கும் வெறும் அலங்காரப் பொருள்களை அள்ளியெறிய என்மனம் இசைய வில்லையே!

என்னை மூடியிருக்கும் போர்வை, புழுதியும் மரணமும்கலந்த போர்வை; நான் வெறுத்தாலும், இன்னும் அதை அன்போடு பற்றி யிருக்கிறேன்.

என் கடன்கள் பல, என் தோல்விகள் பெருந்தோல்விகள், எனது வெட்கம் ரகசியச்சுமை; ஆயினும் என் நன்மையைக் கோரி வரம் கேட்க வரும்போது, எனது பிரார்த்தனை நிறைவேறி விடுமோ என்றும் அஞ்சி நடுங்குகிறேன்.

29

என் பேரால் மூடிக்கிடக்கும் ஒரு சக்தி, என் உள்ளத்தான் என்னுட் சிறையில் அழுதுகொண்டிருக்கிறன்; நான் சுற்றிச் சுற்றிச் சுறுசுறுப்பாய் சுவர் எழுப்பிக் கொண்டிருக்கிறேன்; நாளுக்கு நாள் இந்தச் சுவர் விண்ணளாவி உயரும் போது, இதன் நிழலில் நான் என்னுடைய

உள்ளுருவத்தைப் பார்க்கச் சக்தியற்றுப் போகிறேன்.

இந்தச் சுவரில் எனக்குப் பெருமை அதிகம் ; பெயரில் சிறிதும் பழுது படாமல் இருப்பதற்காக, நான் இதை மண்ணும் மணலும் போட்டுப் பூசி விடுகிறேன். இந்தச் சுவரைப்பற்றி என் கவலை வளர வளர, தூய உள்ளுருவத்தை நான் மறந்தே விடுகிறேன்.

30

நாம் சந்திக்கவேண்டிய இடத்திற்கு நான் தனியாகவே வெளியே வந்தேன். இந்த அமைதியான இருளில், என்னைத் தொடர்ந்து வரும் இவன் யார்?

இவன் பார்வையிலிருந்து விலக, நான் எட்டி நின்ற பின்னும் இவன் விடுவதாக இல்லை.

இவன் பாய்ந்து நடக்கும் வேகத்தில் பூமியினின்று புழுதியைக் கிளப்புகிறான். நான் மெல்லச் சொல்லும் ஒவ்வொரு சொல்லோடும் இவனது உரத்த குரலும் சேர்ந்து ஒலிக்கிறது.

என் நாயகமே! இவனும் நான் தான், இவனே என் அகந்தையின் உருவம், இவன் வெட்கம் அறியாத பேதை; இவனோடு சேர்ந்து உன் வாயிலை நெருங்க நான் நாணமடைகிறேன்.

31

"கைதியே! உன்னைக் கட்டியது யார், சொல்?" கைதி சொல்லுகிறான்: "என் இறைவன். செல்வம் மிகச் சேர்த்து, என் வல்லமையைப் பெருக்கி, நான் எவரையும் மிஞ்சி விடலாம் என்று எண்ணினேன்; என் மன்னனற்குரிய திறையெல்லாம், என் பொக்கிஷத்திலேயே சேர்த்துக் கொண்டேன். உறக்கம் என் கண்களைச் சுழற்றிய போது நான் என் அரசனின் மஞ்சத்திலேயே மெய்ம்மறந்து படுத்து விட்டேன், பின்னர் விழித்துப் பார்க்கையில் என் பொக்கிஷசாலையிலேயே நான் கைதியாயிருந்தேன்!"

"கைதியே! உடைக்க முடியாத இந்தச் சங்கிலியை அமைத்தது யார், சொல்?"

கைதி சொல்லுகிறான்: "நான் தான் இதைக் கவனமாக அடித்து உருவாக்கினேன். அசைக்க முடியாதபடி அடித்து என் ஆற்றலால், இந்த வையகத்தை ஏவல் கொள்ளவும், என் இச்சைபோல்

அதிகாரம் செலுத்தவும் எண்ணினேன். இப்பெருஞ் சங்கிலியை, இரவும் பகலுமாய் மாபெரும் உலைகள் மூட்டி, மட்டில்லாக் கொடுமையுடன் பேயடி அடித்து வார்த்தேன். இறுதியில் கண்ணிகள் யாவும் கனமாய்இணைத்து வேலை முழுதும்முற்றிய பின்னர், அந்தோ, சங்கிலிப் பிடியில் சழக்கன் நானே சிக்கியிருந்தேன்".

32

இந்த உலகில் என்பால் அன்புடையோர்கள் எவ்வகையாலும் என்னை அன்பால் சிறைப்படுத்த முயல்கிறார்கள். அவர்களைப் பார்க்கிலும் அருள்மிகுந்த அண்ணலே, நீயோ என்னை மனம்போல் திரிய விடுகிறாய்!

நான் அவர்களை மறந்து விடுவேனோ என்று பயந்து, என்னை அவர்கள் தனியே விடுவதில்லை. ஆனால் நாட்கள் உருண்டு ஓடிக்கொண்டே யிருக்கின்றன. உன்னைப் பார்க்கவே முடியவில்லை.

பிரார்த்தனையில் உன்னை நான் பரிந்து அழையாவிடினும், நெஞ்சத்தில் உன்னை நான் நினைந்துருகாவிடினும், என்னுடைய சிறு அன்பை எதிர்பார்த்து உன் பேரருள் காத்து நிற்கின்றது.

33

பகலில் அவர்கள் என் வீட்டுள் நுழைந்து, "எங்களுக்குச் சிறியதோர் இடம் போதும்," என்றனர்.

"ஆண்டவனை நீ அடி பரவும்போது நாமும் உடனிருந்தும் பணி புரிவோம், அவன் அருளில் ஒரு சிறிது எனக்குப் போதும்," என்றனர். அதன்பின் என் வீட்டில் ஓர் மூலையில் அமர்ந்தே யிருந்தனர்—மூச்சில்லை, பேச்சில்லை, முடங்கிக் கிடந்தனர்.

ஆனால், கங்குலில் காரிருள் போர்த்ததும், அந்த வஞ்சகர் என் புனித பூஜை யறையுள்ளே பாய்ந்தனர், முரட்டுத்தனமாய் மூர்க்கத்துடனே சாடினர், அக்கிரம ஆசையால் என் ஆண்டவனின் பீடத்தில் படைத்த பொருள் அனைத்தையும் அள்ளிக்கொண்டு ஓடி விட்டனர்.

34

நீயே எனது உடைமை யெல்லாம் என்று நான் கூறும் வண்ணம் ஒரு சிறு அம்சம் மட்டும் என்னிடம் நீ அருள்புரிய வேண்டும்.

பார்த்த இடம் எங்கணும் உன்னையே உணரவும், சகல பொருள்களிலும் உன்னையே நான் சந்தித்திடவும் கணந்தோறும் உனக்கே என் காதலை நிவேதிக்கவும், என் சிந்தையில் ஒரு சிறு கூறு எஞ்சியிருக்க நீ அருள்புரிய வேண்டும்.

என்றுமே நான் உன்னை மறுத்துரையா வண்ணம் எந்த ஓர் அம்சம் என்னைக் காத்து நிற்குமோ, அதுபோதும் எனக்கு.

உன்னுடைய சித்தத்தோடு எளியேனும் இயைந்து நிற்கும் வண்ணம் என்னைப் பிணிக்கும் விலங்குகளில் ஒரு சிறிதேனும் இருக்கட்டும்; உன் இச்சை என் வாழ்வில் நிறைவெய்த வேண்டும்—உன் அருளொன்றே இவ்வாறு பிணைக்க முடியும்!

35

எங்கு மனம் பயமற்று விளங்குகிறதோ,
எங்கே தலை கம்பீரமாய் நிமிர்கிறதோ,
எங்கு அறிவு சுதந்திரத்துடன் பொலி
கிறதோ,
எங்கு குறுகிய சாதிமதப் பிளவுகளால்
உலகம் உடையாமல் உருப்பெற்
றிருக்கிறதோ,

எங்கு உண்மையின் ஆழத்தினின்று
சொற்கள் உதயமாகின்றனவோ,
எங்கே தளரா முயற்சி பரிபூரணத்தை
நோக்கிக் கைகளைப் பரப்புகிறதோ,
எங்கு பகுத்தறிவெனும் தெளிந்த ஆறு
மாண்டொழிந்த பழக்கங்களான
பயங்கரப்பாலை மணலில் பாயாது
மீள்கிறதோ,
எங்கே விரிந்த சிந்தனையிலும் செயலிலும்
எனது உள்ளத்தை நினது அருள்
இழுத்துச் செல்லுகின்றதோ
அந்தச் சுதந்திர சுவர்க்கத்தில்,
என் அப்பனே, எனது நாடு
விழித்தெழுவதாக!

## 36

எம் பெருமானே! உன்னிடம் எனது பிரார்த்தனை இதுவே. என் இதயத்தில் வறுமையின் வேரை வெட்டுவாயாக. என் இன்ப துன்பங்களை எளிதில் தாங்கக் சக்தி அருள்வாயாக. எனது அன்பு சேவையிலே கனியும்படி செய்யும் ஆற்றல் அருள்வாயாக. தீனர்கள் என் தமரல்லர் என்று ஒருகாலும் புறக்கணியா வண்ணமும், ஆணவமுள்ள வலிமையின் முன்னே தலை வணங்கிடா வண்ணமும் எனக்கு ஆற்றல் அருள்வாயாக. நாள்தோறும்

தோன்றும் சிறுமைகள் நீங்கி என் உள்ளம் உயர்வடைய வல்லமை அருள்வாயாக. உன் திருவுளக் குறிப்பறிந்து என் வலிமையை எல்லாம் உனக்கு நிவேதிக்க அருள்புரிவாயாக.

37

என் சக்தி யெல்லாம் தளர்ந்துள்ள நிலையில் என் யாத்திரை ஒருவாறு முடிவுற்றது என்று எண்ணினேன்,—இனி எதிருள்ள பாதை அடைபட்டது என்றும், என்வசம் இருந்த சாமக்கிரியை அனைத்தும் தீர்ந்து விட்டன என்றும், மோன நிலையில் ஒதுக்கமாய் ஓரிடத்தில் தங்கலாம் என்றும் எண்ணியிருந்தேன்.

எனக்கும் ஓர் முடிவுண்டு என்றே உன் சித்தமதில் தோன்றவில்லை என்று நான் காண்கிறேன். முன்னைப் பழஞ் சொற்கள் முணுமுணுத்து முடிந்ததுமே, பின்னைப் புது இசைகள் என் இதயத்தில் ஊறிவந்து ஒலிக்கின்றன; பழைய பாதைகள் மறைந்த இடத்தில், என் முன்பு அற்புதங்கள் நிறைந்த ஒரு புது நாடு விரிகின்றது.

38

உன்னையலால் வேறொன்றும் வேண்டுகிலேன் என்று என் இதயம் இடையறாது கூவிக் கொண்டிருக்க வேண்டும். இரவும் பகலும் என் உள்ளத்தைப் பஞ்சரிக்கும் ஆசைகள் அத்தனையும் பொருளற்ற பொய்ம்மைகள்.

இரவின் இருளிடையே ஒளி வேண்டும் என்ற பிரார்த்தனை மறைந்து அடங்கியிருத்தல்போல், பிரக்ஞையற்று நான் பேதுற்ற நிலையிலும், 'உன்னையலால் வேறொன்றும், வேண்டுகிலேன்' என்ற ஓலமே என்னுள்ளிருந்து ஒலிக்கிறது.

சளைக்காத வலிமையுடன் சாந்தியைச் சிதைக்கும் சண்டமாருதமும் சாந்தியிலேயே முடிவுற வேண்டுதல் போல, நின் அருளை நான் எதிர்த்துக்கிளம்பினும், 'உன்னையலால், வேறொன்றும் வேண்டுகிலேன்' என்றே உரை குழறிக் கூறி அரற்றுகிறேன்.

39

எனது இதயம் இறுகிக் காய்ந்திருக்கும் போது, என்பால் கருணை மழை பொழிவாய்.

வாழ்க்கையினின்று அழகு அழியும் போது, கானம் இசைத்துக் கொண்டு வருவாய்.

வேலையின் குழப்பத்தில் எத்திசையும் இருண்டு என்னை மூடி மறைக்கும்போது, சாந்தி யளிக்கும் நிலையில் சாந்த சொரூபி யாய் வருக.

என் ஏழை உள்ளம் ஒரு மூலையில் ஒடுங்கிக் கிடக்கும்போது, என் மன்னவ, கதவை உடைத்துக் கொண்டு மன்னவ னின் மாட்சியொடு வளமையெலாம் சூழ வருக வருக.

ஆசை என் உள்ளத்தை மயக்கத்திலும் மண்ணிலும் ஆழ்த்தும்போது, புனிதம் நிறைந்த பரம் பொருளே, என்றும் விழித் திருக்கும் இறையே, ஒளியுடனும் இடி யுடனும் வந்து அருள் புரிவாயாக !

40

கடவுளே ! எனது காய்ந்த இதயத்தில் பற்பல நாட்களாக மழை பொழியவில்லை. ஆகாயம் பயங்கரமான நிர்வாண நிலையி லிருக்கிறது—மெல்லியதோர் மேகத்திரை கூட இல்லை. தொலை தூரத்தில் கூட குளிர்ந்த மழைக் குறியைக் காண முடிய வில்லை.

காலனின் கருநிறத்தோடு கூடிய உனது கோபப் புயலை அனுப்பி, அதன் இருண்ட மரணக்குறியாலும் மின்னற் சாட்டையாலும் ஆகாசத்தை எங்கும் கலக்குவாய்!

இதயத்தைக் காய்ந்து உருக்கும் இந்த மௌன அழலைத் திரும்ப அழைத்துக் கொள், இதன்ஜ்வாலை கொடிது, கொடிது, கூர்மையானது, பாய்கிறது; அமைதியாய், கொடுமையாய், கொழுந்துவிட்டு எரிந்து, என் இதயம் ஏக்கமுற்று வெந்து நீறுகும் படி செய்கிறது.

தந்தையின் கோபத்தில் எழும் தாயின் கண்ணீர் முகம்போல், நின் அருள்மேகம் கீழே கவிந்து கிடக்கட்டும்!

41

என் அரும் காதலனே! யாவர்க்கும் பின்னுல் ஏன் இருண்ட நிழல்களில் ஒளிந்து கொண்டிருக்கிருய்? அவர்கள் உன்னையும் தள்ளிக்கொண்டு, உன்னைப் பொருட்படுத்தாமலே, புழுதி நிறைந்த பாதையில் போகிருர்கள்.

உனது பூசைக்குரிய பொருள்களையெல்லாம் பரப்பி வைத்துப் பணிவுடன் காத்து நிற்கிறேன். பொழுதும் சலித்துப்போய்க்

கொண்டிருக்கிறது; வழியில் போகிறவர்கள் வந்து என் மலர்களை ஒவ்வொன்ருக எடுத்துச் செல்வதால், என் குடலையும் அநேகமாய்க் காலியாகிவிட்டது.

காலை கழிந்து பகலும் வந்தது. அந்தி வேளையில் என் கண்கள் தூக்கத்தில் மயங்கிக் கிடக்கின்றன. வீடு திரும்புகிறவர்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கின்ருர்கள். நானே வெட்கமடைகிறேன். முகமூடியை இழுத்துத் திரையிட்டுக்கொண்டு செல்லும் ஒரு பிச்சைக்காரிபோல், நான் அமர்ந்திருக்கிறேன். நான் எதற்காகக் காத்திருக்கிறேன் என்று அவர்கள் கேட்கும்போது, நான் கீழ் நோக்கிய வண்ணமாய் பதில் கூற முடியாது, தயங்கி நிற்கின்றேன்.

உனக்காக நான் அங்கு தங்குகிறேன் என்றும், நீ வருதல் திண்ணமென்று வாக்களித்தாய் என்றும், எங்ஙனம் நான் அவர்களிடம் கூறுவேன்? ஆராதனைக்காக, இந்த வாடாத வறுமையையே எனது ஸ்ரீதனமாக வைத்திருக்கிறேன் என்று நான் நாணமின்றிக் கூறுவது எங்ஙனம்? ஆ! இந்த உண்மையான பெருமையை, என் இதயத்தினுள் ஆன்ம ரகசியமாகவே அணைகிறேன்!

புல்லின்மேல் அமர்ந்த வண்ணம் நான் ஆகாயத்தை உற்று நோக்கி, திடீரென நீ விஜயம் செய்யும் மாட்சியை எண்ணிக் கனவு காண்கிறேன் — வானமெங்கும் ஜோதி வெள்ளம், உனது தேர்மிசை பொன் மயமான கொடிகள் பறக்கின்றன. நீ உன் அரியணை விட்டு இறங்கி மண் மீது கிடக்கும் என்னை அழைத்துச்செல்ல வருவதையும், கோடைக் காற்றில் ஆடும் கொடிபோல் துடித்து நிற்கும் பஞ்சைப் பெண்ணான என்னைக் கரம்பற்றி உன்னருகே இருத்திக்கொள்வதையும், சாலையிலுள்ள ஜனங்கள் கண்டு வாயடைத்து வியந்து நிற்கிறார்கள்.

ஆனால் காலம் ஓடுகிறது, இன்னும் நீ தேர் கொண்டுவந்த பாடில்லை. ஆரவாரத்துடனும் கோலாகலத்துடனும் ஊர்வலங்கள் எத்தனையோ இவ்வழியே செல்கின்றன. நீ மட்டும் அவர்கள் அனைவருக்கும் பின்னால், இருண்ட நிழல்களில் மௌனமாக ஒதுங்கி நிற்பாயோ? நான் தனியே வீணான ஆசையினால், காத்திருந்து அல்லலுற்று அழுதழுது தேய்வதுதான் முறையோ?

42

அதிகாலையில் நாம் இருவரும், நீயும்

நானும் தனியே ஒரு தோணியில் பிரயாணம் செய்ய வேண்டுமென்றும், இது உலகத்தில் ஒருவருக்கும் தெரியக் கூடாதென்றும், நமது யாத்திரை ஒரு தேசத்துக்கும் செல்லாத முடிவற்ற யாத்திரையென்றும், என் காதில் இரகசியம் ஒலித்தது.

அந்தக் கரையற்ற சாகரத்தின் மீது, நீ சிரிப்புடனே செவிமடுத்துக் கேட்கின்ற போது, சொற்கட்டை உடைத்துக் கொண்டு, கடலில் அலைகள் பொங்கி எழுவதுபோல, என்னுடைய பாடல்களும் கீத அலைகளாகப் பொங்கிப் பெருகி நிற்கும்.

அந்நேரம் இன்னும் வரவில்லையா, ஐயா? பணிகள் இன்னும் பாக்கியுண்டோ? அதோ, அந்திநேரமும் வந்து விட்டதே! மங்கி மறையும் மாலை ஒளியில் கடல்மீது திரியும் புள்ளினங்கள் எல்லாம் கரை மீதுள்ள தம் கூடுகளுக்குப் பறந்து வருகின்றன.

நாவாயைப் பிணித்துள்ள சங்கிலிகள் கழன்று, அந்தி நேரத்தின் கடைசிச் சுடர் போல, நாவாய் அடர்ந்து இருளோடு எப்பொழுது மறையுமோ?

43

முன்பு உன்னை நான் வரவேற்கத் தயாராயில்லாத நாளும் உண்டு; என் அரசே

எனக்கு அறிமுகமில்லாமல், கும்பலில் ஒருவனாக நீ என் இதயத்தில் வந்து அமர்ந்ததும் உண்டு; அமர்ந்து என் வாழ்வின் ஓடி மறையும் ஒவ்வொரு கணத்திலும் நித்தியமாக நிலைத்திருக்கும் நின் முத்திரையைப் பதிப்பித்ததும் உண்டு.

இன்று நான் அக் கணங்களைக் காண்கையில், ஒவ்வொன்றின் மீதும் உன் கணையாழி முகர் கண்டு துடிக்கிறேன். ஏனெனில் அற்பமான நாட்களில் நான் அடைந்த இன்ப துன்ப நினைவுகளிடையே அவையும் மண்ணிற் கலந்து சிதறிக் கிடக்கின்றன.

நான் குழந்தையாக மண்ணில் விளையாடும்போது, நீ என்னை வெறுத்து மறையவில்லை; எனது விளையாட் டறையில் கேட்ட அதே காலோசையே இப்போது நட்சத்திரங்களில் எதிரொலிப்பன!

44

ஒளியை நிழல் துரத்திச் செல்வதும், கோடையைத் தொடர்ந்து மாரி வருவதுமான இந்தச் சாலை வழியே காத்திருப்பதே எனக்கு இன்பம்!

விண்ணிலிருந்து பல தூதர்கள் செய்திகளுடன் வருகிறார்கள்; சாலையில் வீதி

யில் வேகமாக ஓடுகிருர்கள். எனது இதயம் உள்ளே இன்புறுகிறது. அருகே வீசுகின்ற இளங் காற்றின் இனிமையைப் பருகுகின்றேன்.

அதிகாலையிலிருந்து அந்தி மாலைவரை, நான் 'என் வாசற்படியண்டை உட்கார்ந்துகொண்டு, அந்த சந்தோஷ நிமிஷம் திடீரென எப்போது வருமோ என்று ஆவலாய் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன்.

இடையிலே நான் தனிமையிற் பாடிச் சிரிக்கிறேன். இடையிலே காற்றில் கடவுளின் வருகையை உறுதியாய் அறிவிக்கும் மணம் கலந்து வீசுகிறது.

## 45

அவனுடைய அமைதியான காலடி ஓசையைக் கேட்டிருக்கின்ருயா ?

அவன் வருகிருன், வருகிருன், எப்போதும் வருகிருன்.

ஒவ்வொரு கணமும், ஒவ்வொருயுகமும், ஒவ்வொரு நாளும், ஒவ்வோர் இரவும், அவன் வருகிருன்: வருகிருன், எப்போதும் வருகிருன்.

என்னுடைய பல மன நிலைகளில் எத்தனையோ பாடல்கள் பாடியிருக்கி றேன். எல்லாம் அவனுடைய வருகை யையே ஒலித்துக் குறிக்கின்றன.

வெம்மையுள்ள பங்குனியின் மண முள்ள நாட்களில், காட்டு வழியாக அவன் வருகிறான், வருகிறான், எப்போதும் வரு கிறான்!

ஆடிமாத இரவுகளில், மழை இருளில், மேகங்களின் இடித்தேரில் அவன் வரு கிறான், வருகிறான், எப்போதும் வரு கிறான்.

துன்பச் சுழற்சியில், அவனுடைய கால டிகள் என் இதயத்தில் பதிகின்றன; அவனுடைய பொன்னடிகளைத் தீண்டி எனது ஆனந்தம் மின்னிப் பொலிகிறது!

46

எந்த எட்டாத காலத்தினின்றும் என்னைச் சந்திக்க நீ நெருங்கி வருகிறாய் என்பதை நான் அறிய முடியவில்லையே! சூரியனும் நட்சத்திரங்களும் என் பார்வை யினின்று உன்னை ஒரு போதும் மறைக்க முடியாது.

காலையும் மாலையும் பல தடவைகளில், உனது தூதன் என் இதயத்தில் புகுந்து என்னை இரகசியமாக அழைத்திருக்கிறான்.

இன்று எனது உயிர் ஏன் கிளர்ந்து துடிக்கிறது. எனது இதயத்தில் ஓர் ஆனந்த லாகிரி ஏன் பரவிக் கிடக்கிறது என்று எனக்குத் தெரியவில்லையே!

எனது வேலையை முடித்துக்கொள்ளக் காலம் வந்து விட்டது போல் தெரிகிறது; உனது இனிய வருகையின் மென்மை யான மணம் காற்றில் பரவி வருகிறது.

47

இரவு முழுதும் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்ததில் வீணாகக் கழிந்தது; களைத்து உறங்கும்போது, என் வீட்டு வாசலில் திடீரென்று வந்து விடுவானோ என்று அஞ்சுகிறேன். தோழியரே, அவ னுடைய பாதையைத் திறந்து வையுங் கள், அதனை வழி மறிக்காதீர்கள்.

அவனுடைய காலோசை என்னை எழுப் பாவிட்டால், நீங்கள் என்னை எழுப்பாதீர் கள். இதுவே எனது வேண்டுகோள். பட்சிகளின் கூக்குரலினாலோ, காலைக்காற் றின் எதிரொலியாலோ, தூக்கத்திலிருந்து

நான் விழிக்க விரும்பவில்லை. கடவுள் கதவண்டை வந்தாலும், என்னைத் தொந்திரவற்றுத் தூங்கவிடுங்கள்.

ஆ! தூக்கமே, அருமையான தூக்கமே! கடவுள் தீண்டியதும் மறையும் தூக்கமே! தூக்க இருளினின்று எழுகின்ற கனவு போல் நிற்கும், அவனுடைய சிரிப்பின் ஒளியைக் கண்டே, என் மூடிய கண்கள் இதழ் திறந்து விரியும்.

எவ்வுருவத்திற்கும் முதன்மையாய், முழுமுதற் சோதியாய் விளங்கும் பரம் பொருள் என் முன் தோன்றட்டும். அவனுடைய கண்ணொளியினின்றும் எனது ஆத்மானந்தம் விழித்தெழுக. நான் என்னுள்ளே திரும்பி அவனையே அடைய, உன் அருள் பிறக்கட்டும்.

நான் என் உண்மைச் சொரூபத்தை உணர்வதும், அவனை நான் அடைவதும், ஏகமாய் நிகழவேண்டும்.

48

காலை அமைதி பட்சிகளின் கீத வெள்ளமாகப் பெருகுகிறது. புஷ்பங்கள் வழியில் ஆனந்தமாய்க் காட்சியளிக்கின்றன. மேக மண்டலத்தின் இடைவெளியில் தங்கம்

செல்வமாகச் சிதறிக்கிடக்கின்றது; நாங்கள் வீதியில் செல்லுகிறோம்; ஒன்றையும் கவனிக்கவில்லை.

இன்பப் பாடல்கள் பாடவுமில்லை, விளையாடவுமில்லை, கிராமத்தில் வியாபாரம் செய்யப் போகவுமில்லை, ஒன்றும் பேசவுமில்லை, சிரிக்கவுமில்லை, வழியில் தயங்கவுமில்லை. நேரம் செல்லச் செல்ல, எங்களுடைய நடை வேகமுற்றது.

சூரியன் உச்சியை அடைந்தான்; புருக்கள் நிழலில் கூவின. உதிர்ந்த இலைச் சருகுகள் பகல் காற்றில் குதித்துச் சுழன்றன. மாடுமேய்க்கும் பாலகன் ஆலமரத் தடியில் அயர்ந்து தூங்கிக் கனவு கண்டு கொண்டிருந்தான்; நான் நீர் நிலையின் அருகே படுத்து, களைத்திருந்த அங்கங்களைப் புற்றரையின் மேல் பரப்பினேன்.

நண்பர்கள் என்னைக்கண்டு நகைத்தார்கள்; அவர்கள் தலை நிமிர்ந்து ஓடினார்கள்; பின்புறம் திரும்பிப் பார்க்கவுமில்லை, நிற்கவுமில்லை; தூரத்திலுள்ள அடிவானத்திற்கு அப்பால், மங்கலான நீலத்தில் எங்கோ மறைந்தார்கள். பல புற்றரைகளையும் குன்றுகளையும் கடந்து புதுப்புதுத் தேசங்களின் வழியாகச் சென்

ருர்கள். முடிவற்ற பாதையின் வீரத் துணை வனே! ஏளனமும் நிந்தனையும் என்னை எழுந்திருக்கத் தூண்டின, ஆனால் அசட்டையாயிருந்து விட்டேன்.

மங்கியதோர் இன்பத்தின் நிழலில், ஆனந்தமான ஓர் அவமானத்தின் ஆழத்தில் இனிப் பயனில்லை, என்று ஆழ்ந்து விட்டேன்.

சூரியனின் கிரணங்களைக் கொண்டு ஆணிப்பொன் ஜரிகையிட்ட மரகதப் பசுமை எங்கும் போர்த்திருந்ததால், அந்த அமைதியில் என் இதயமும் அயர்ந்து விட்டது. என் யாத்திரையின் குறிக்கோளை மறந்தேன், ஆடுகின்ற நிழல்களிலும் பாடுகின்ற பாடல்களிலும் எளிதாக என்னைப் பறிகொடுத்து விட்டேன்.

கடைசியாக நான் தூக்கத்தினின்றும் எழுந்து கண்களைத் திறந்ததும், நீ என் அருகே நின்றுகொண்டிருப்பதைக் கண்டேன்; என் துயிலைக்கண்டு நீ புன்னகை பூத்தது பேரொளியாக விளங்கிற்று. பாதை நீண்டு சுருண்டு சென்றதையும், உன்னை அடைவது சிரமமென்றும் நான் முன் எவ்வளவு பயந்துகொண்டிருந்தேன்.

## 49

நீ உனதுசிம்மாசனத்தினின்று இறங்கி வந்து என் குடிசையின் முன் நிற்கின்ருய்.

நான் ஒரு மூலையில் தன்னந்தனியே பாடிக்கொண்டிருக்கிறேன். என் இசை உன் செவியில் பாய்ந்துவிட்டது. நீ இறங்கி வந்து என் குடிசையின் முன் நிற்கின்ருய்.

உனது மண்டபத்தில் பாடகர்கள் பலர்; அங்கே எப்போதும் பாடல்கள் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன; ஆனல் பாடிப் பழக்கமில்லாத என் கீதம் உனது அன்பைத் தொட்டுவிட்டது; ஒரு சிறு துன்ப நாதம் உலகப் பெருங் கீதத்திற் கலந்தது. அது கேட்டு, என்னிடமிருந்து ஒரு மலரைப் பரிசாகப் பெறுவதற்கு,எளியேன் குடிசையருகே எழுந்தருளிவிட்டாய்!

## 50

கிராம வீதியில் வீடு வீடாகப் பிச்சையெடுத்துச் செல்லுகின்றேன்; அப்போது தூரத்தில் உனது தங்கரதம் ஓர் அகண்ட அதிசயக் கனவுபோல் தோன்றும்; அரசர்க்கரசனை இவன் யார் என்று நான் அதிசயிப்பேன்.

எனது நம்பிக்கை உயர்ந்தது, என் துன்ப நாட்கள் முடிவடையுமென்று எண்ணினேன், கேட்காமல் பிச்சை கிடைக்குமென்று காத்திருந்தேன். மண்ணில் எங்கும் செல்வங்கள் சிதறிக்கிடக்குமென்று எண்ணியே காத்திருந்தேன்.

நான் நின்ற இடத்திலே ரதமும் நின்றது. உனது பார்வை என்பால் ஒளி வீசியது. நீ என்னிடம் புன்முறுவலுடன் வந்தாய். எனது வாழ்வின் அதிர்ஷ்டம் இறுதியில் கிடைத்தது என்றே எண்ணினேன். ஆனல் நீ திடீரென்று உன் வலது கையை நீட்டி, "எனக்கு என்ன காணிக்கை வைத்திருக்கிருய்?" என்று வினவினய்.

பிச்சை எடுப்பவனிடம் நீ பிச்சை கேட்பதும், அரசுக்குரிய திருவிளையாடலா? நான் மனங்குழம்பி நிலையிழந்தேன். அப்பால் என் பையினின்று ஒரு சிறு தானியத்தை எடுத்து உன்னிடம் கொடுத்தேன்

இன்று மாலையில் ஓர் அதிசயம் கண்டேன்; எனது பையை உதறிக் காலிசெய்யும்போது, என் தானியக் குவியலில் ஒரு சிறு தங்க மணியைக் கண்டு வியந்தேன்! என் முன்னதாகவே என்னுடைய பையி

லுள்ளது அனைத்தையும் உன்னிடம் கொடுக்கும் உள்ளம் வரவில்லையே என்று வருந்திக் கதறி அழுதேன்.

## 51

இரவு இருண்டது, பகல் வேலைகள் முடிந்தன. இரவின் கடைசி விருந்தினன் வந்துவிட்டானென்றும், கிராமத்தில் வீடுகள் எல்லாம் மூடப்பட்டன என்றும் நினைத்தோம். ஆனால் சிலர் மாத்திரம், "அரசன் வரவேண்டும்" என்று சொன்னார்கள். நாங்கள் சிரித்துக்கொண்டு, "அப்படி இருக்க முடியாது!" என்றோம்.

கதவைப் பலதடவை இடித்த சத்தம் போல் கேட்டது. ஆனால் அதைக் காற்றின் வேலையாகவே கருதியிருந்தோம். விளக்கை அணைத்துவிட்டுத் தூங்கப் போனோம். சிலர் "தூதுவன் தான் தட்டுகிறான்!" என்றார்கள். நாங்கள் சிரித்துக்கொண்டு, அதை மறுத்துவிட்டு, "இதுவும் காற்றின் வேலை!" என்றே சொன்னோம்.

பின்னர் நள்ளிருளில் ஒரு சத்தம் கேட்டது. தூரத்தில் நிகழும் இடி யோசை என்று தூக்கத்தில் கருதினோம். பூமி அதிர்ந்தது, சுவர்கள் ஆடின, தூங்கிக் கிடந்த எங்களையும் அது உலுக்கிவிட்டது.

வண்டிச் சக்கர ஓசை என்ருர் சிலர். தூக்க மிகுதியால், "அதுவும் மேகத்தில் நிகழும் இடியோசை!" என்ரேம் நாங்கள்.

முரசு அதிரும்போது இரவு இருண்டே இருந்தது. ஒரு குரல் கேட்டது, "எழுமின், தாமதியாதீர்!" நாங்கள் கைகளால் எங்கள் இதயத்தை அழுத்திக் கொண்டு, பயத்தால் நடு நடுங்கினேம். "அதோ மன்னனின் மணிக்கொடி பாரீர்!" என்ருர் சிலர். நாங்கள் துள்ளி எழுந்து, "இனி ஒரு கணமும் சுணங்கமுடியாது!" என்று கூவினேம்.

அரசன் வந்து விட்டான் — ஆனல் விளக்குகள் எங்கே? மலர் மாலைகள் எங்கே? அவன் அமரச் சிம்மாசனம் எங்கே? ஐயோ, வெட்கம், வெட்கம்! மண்டபம் எங்கே, அலங்காரங்கள் எங்கே? ஒருவர் சொன்னர், "இது வீண் இரைச்சல்! வெறுங்கைகளுடன் அவனை வரவேற்று, உங்களுடைய காலி அறைகளுக்குள் அழைத்துச் செல்லுங்கள்!"

கதவுகளைத் திறந்து வையுங்கள்; சங்கநாதம் ஒலிக்கட்டும்! இரவின் நள்ளிருளில், நமது இருண்ட வறண்ட இல்லத்தின் அரசன் வந்திருக்கிருன். விண்ணில் இடி கர்ஜிக்கிறது. இருள் மின்னலில்

நடுக்கமுறுகின்றது, உனது கிழிந்த பாயைக் கொண்டுவா, அதை முற்றத்தில் விரி. பயங்கர இரவின் அரசன் திடீரென்று புயலுடன் உதயமாகி யிருக்கிருன்.

2

உன் கழுத்தில் அணிந்திருந்த ரோஜா மாலையை நான் கேட்கலாமென்று நினைத்தேன், ஆனுல் எனக்குத் துணிவு வரவில்லை. நீ பிரியும்போது, நான் காலையில் காத்திருந்தேன், படுக்கையில் சில இதழ்கள் கிடந்தன. பிச்சைக்காரன் போல் அதிகாலையில் ஓரிரண்டு இதழ்களேனும் அகப்படுமோ என்று தேடினேன்.

ஆ! நான் காண்பதென்ன? உனது காதலின் சின்னம் என்ன இங்கு கிடக்கிறது? அது பூவல்ல, வாசனைகளல்ல, பன்னீர்ச் செம்புமல்ல—உனது வலிமிகுந்த வாளே கிடக்கின்றது. அது தீக்கொழுந்துபோல் மின்னுகிறது, இடிபோல் கனக்கிறது. காலை இளங்கதிர் சாளரத்தின் வழியே நுழைந்து உனது படுக்கையின் மீது பரவிக்கிடக்கின்றது. காலைப்பட்சி கூவுகின்றது, "பெண்ணே, என்ன வைத்திருக்கிருய்?" அது ஒரு பூவுமல்ல, வாசனைகளுமல்ல, பன்னீர்ச் செம்புமல்ல-அது உனது பயங்கர வாளே!

இது உன் வெகுமதி என்று நான் அமர்ந்திருந்து ஆச்சரியப் படுகிறேன். அதை ஒளிக்க இடம் தெரியவில்லை. துரும்புபோலுள்ள நான் அதை அணிய நாணுகின்றேன்; எனது மார்போடு அணைத்துக்கொண்டால், வலிக்கிறது. எனினும் இந்த நன்கொடையை, இந்தத் துன்பச் சுமையின் பெருமையை எனது இதயத்தில் அணிந்தே கொள்வேன்.

இனிமேல் இந்த உலகில் எனக்கு எவ்வித பயமுமில்லை. என்னுடைய போரிலெல்லாம், நீயே வெற்றிபெறுவாய். எனக்குத் தோழனாக மரணத்தை விட்டிருக்கின்றாய். அவனுக்கு என் உயிரைக்கொண்டு மணிமுடி கவிப்பேன். என் பாசத் தளைகளை அறுத்தெறிய, இது போன்ற வாளே நல்ல துணை; இந்த உலகில் எனக்கு எவ்விதப் பயமுமில்லை.

இதுமுதல் அற்பமான அலங்காரங்களை ஒழித்தேன். எனது இதயத்தின் மன்னனே, இனி மூலையில் பதுங்கி அழ வேண்டியதில்லை, இனி வெளி நடிப்பிலுள்ள நாணமும் இனிமையுமில்லை. நீ தந்த வாளே எனது அணி! இனி எனக்கு எவ்விதப் பொம்மைஅலங்காரமும் தேவையே இல்லை!

53

நட்சத்திரங்களாலும் பல வர்ண இரத்தினங்களாலும் உனது அழகிய மணிக்கட்டு மின்னிப் பொலிகிறது. ஆனால் உனது வாள் அதைவிட அழகானது, மின்னல்போல் வளைந்து மின்னுகிறது. கருடன் சிறகுபோல் ஜொலிக்கிறது, அஸ்தமனத்தின் சினந்த சிவந்த ஒளிக்கு நேராக நின்று மின்னுகிறது.

வாழ்வின் இறுதியில் மரணவேதனையில் கடைசி முறையாக ஜீவன்துடிப்பதுபோல் அது துடிக்கிறது. மண் வாசனையைத் தகிக்கும் ஒரே சுத்த நிர்க்குணமான ஜோதிபோல் பிரகாசிக்கிறது.

நட்சத்திரக் கற்களால் இழைக்கப்பட்ட ஆபரணங்களுடன் உனது மணிக்கட்டு அழகுடன் பொலிகின்றது; ஆனால் இடியரசே! உனது வாள் நிறைந்த வேலைப்பாடும் அழகும் பொருதி, பார்க்கவும் நினைக்கவும் பயங்கரமாகஇருக்கிறது.

54

உன்னிடம் நான் ஒன்றும்கேட்கவில்லை. உன் செவியில் என் பேரைக்கூட உச்சரிக்கவில்லை. நீ விடைபெறும்

போதும், நான் மௌனமாகவே நின்றேன். கிணற்றண்டை சாய்ந்து விழுந்த மர நிழலில் நான் தனியே நின்றேன்; மாதர்கள் மண்பானைகள் நிறையத் தண்ணீர் கொண்டு வீடு திரும்பிவிட்டார்கள். காலை பகலாகி வருவதால், தங்களுடன் வீட்டுக்கு வரும்படி அவர்கள் கூவியழைத்தார்கள். ஆனால் நான் மங்கிய சிந்தனைகளில் ஆழ்ந்து அயர்ந்து நின்றேன்.

நீ வரும்போது உனது காலடி கேட்கவில்லை. என்னை நீ கவனிக்கும்போது, உன் கண்கள் சோகம் நிறைந்திருந்தன. தாழ்ந்த குரலில் நீ பேசும்போது, உனது குரல் சோர்ந்திருந்தது; "ஆ, நான் தாக விடாயால் தவிக்கும் பிரயாணி," என்று நீ கூறினாய். நான் எனது பகற்கனவிலிருந்து எழுந்து, உன் கைகளில், எனது குடத்திலிருந்து தண்ணீர் ஊற்றினேன். இலைகள் மேலே சலசலத்தன; எங்கோ இருளிலிருந்து, குயில் பாடியது; வளைந்த வீதியிலிருந்து கருவேலா மரங்களின் மலர்களிலிருந்து வாசனை விரிந்து பரவியது.

என் பேரை நீ கேட்கும்போது நான் நாணிப் பேசமுடியாத நிலையடைந்தேன்.

என்னை உன் மனத்தில் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்படி நான் உனக்கு என்ன செய்திருக்கிறேன். ஆனால் நான் தண்ணீர் தந்து உனது தாகத்தைத் தீர்க்க முடிந்ததே என்ற சிந்தனை என் இதயத்தில் பதிந்து இன்பத்தில் ஆழ்த்து கிறது. வைகறையில் காலதாமதத்துடன் பட்சி ஒன்று களைத்துப் பாடுகிறது. வேப்பமரத்தின் இலைகள் தலைக்குமேல் சலசலத்து ஆடுகின்றன! நான் உட்கார்ந்த வண்ணம் நினைந்து நினைந்து உருகுகிறேன்.

55

உனது இதயத்தில் களைப்புத்தோன்று கிறது. உன் கண்கள் அயர்ந்திருக் கின்றன.

முட்களின் மத்தியில், பூ பொலிவுடன் அரசு செலுத்தும் செய்தி உன் காதில் இன்னும் விழவில்லையா? எழுவாய், விரைவாய், எழுவாய்! காலத்தை வீணுக்காதே!

பாறைப் பாதையின் முடிவில், பரிசுத்த மான அமைதியில் எனது நண்பன் தனியே உட்கார்ந்து கொண்டிருக்கிருன்.

அவனை ஏமாற்ருதே. எழுவாய், விரை வாய், எழுவாய்!

பகலவனின் வெம்மையால், ஆகாசம் துடித்தாலென்ன, எரியும் மணல் தனது தாகத்திரையை எங்கும் பரப்பினுலென்ன?

உனது இதயத்தின் ஆழத்தில் இன்பம் இல்லையா? பாதையாகிய வீணையில் உன் திருவடி தீண்டும்போதெல்லாம், வேதனை யுடன் கலந்த இன்பநாதம் எழுந்து ஒலிக்காதா?

56

என்னுள் உனது இன்பம் பொங்கி வழிகிறது. இப்படி என்னிடம் நீ மன மிரங்கி வந்திருக்கிருய். அண்டங்கள் அனைத்திற்கும் அதிபதியே! நான் இல்லா விடின் உன் அருளை எங்கே நீ பெய்வாய்?

மாநிலத்தின் செல்வம் அனைத்திலும் அடியேனை உன் பங்காளியாக ஏற்றுக் கொண்டிருக்கிருய். என் இதயத்தில் முடிவில்லாத உன் ஆனந்தத் திருவிளை யாடலே நடைபெறுகிறது. என் வாழ்வில் உன் திருவுள்ளமே உருப்பெற்றுத் திகழ்கிறது.

பேரரசே, என்னை வசியப்படுத்தவே நீ இப்படி அழகு செய்துகொண்டிருக்கிருய்; உனது காதல், உனது காதலியின் உள்ள நெகிழ்ச்சியில் மறைந்துவிட்டது. நம் மிருவர்களின் இன்ப ஒருமையில் உன்னைக் கண்டு மகிழ்கின்றேன்.

57

ஒளியே எனது ஒளியே, உலகத்தை நிறைக்கும் ஒளியே, கண்ணைக் கொஞ்சித் தழுவும் ஒளியே, இதயத்தைஇன்புறுத்தும் ஒளியே!

ஆ, என் அன்பே! எனது வாழ்வின் மத்தியில் ஒளி நர்த்தனம் செய்கிறது; அந்த ஒளி எனது காதல் வீணையின் கம்பிகளை மீட்டுகிறது; ஆகாசம் தெரிகிறது; காற்று அலறி ஓடுகிறது, பூமியில் சந்தோஷம் களிநடம் புரிகிறது.

ஒளிக்கடலில் வண்ணாத்திப் பூச்சிகள் சிறகு விரிக்கின்றன. ஒளி வெள்ளத்தின் அலைகளின் உச்சியில் தாமரை மலர்களும் மல்லிகை மலர்களும் மலர்ந்து மிதக்கின்றன.

ஒவ்வொரு மேகத்திலும், ஒளி தங்கமயமாகச் சிதறிக் கிடக்கின்றது. அது இரத்தினங்களை அள்ளிச் சொரிகின்றது.

என் அன்பே! ஆனந்தம் ஓர் இலை யினின்று மறு இலைக்குத் தாவிப் பாய் கிறது. இன்பம் எல்லை தாண்டிப் பரவு கிறது. விண்ணாறு கரை பொங்கி எழுந்து விட்டது. இன்ப வெள்ளம் எங்கும் பெருக் கெடுத் தோடுகிறது.

58

எனது இறுதிப் பாட்டில், இன்பத்தின் சகல இசைகளும் கலந்து இலங்கட்டும்—எந்த இன்பம் பூமியில் பார்க்குமிடமெல் லாம் நிறைந்து பசும்புல் அளவுக்கு மிஞ்சி வளர்ந்து மண்டிவிடும்படி செய்கிறதோ, எந்த இன்பம் ஜனன மரணம் என்னும் இரட்டையர்களை வையமெங்கும் ஆடித் திரியும்படி செய்கிறதோ, எந்த இன்பம் சூறைக் காற்றோடு சுழன்று திரிந்து சகல உயிர்களையும் ஆனந்த வெறியுடன் எழும் படி செய்கிறதோ, எந்த இன்பம் வேதனை என்னும் செந்தாமரையின்மீது கண்ணீர் சிந்திக்கொண்டு அமர்ந்திருக்கிறதோ, எந்த இன்பம் தன் உடமைகள் அனைத் தையும் குப்பையில் கொட்டிவிடுகிறதோ, எந்த இன்பம் சொல்லற்றமோன நிலையில் இருக்கிறதோ,— அந்த இன்பத்தின் இசைகள் அனைத்தும் என் கீதத்தில் கலந்து ஒலிக்கட்டும்!

## 59

ஆம், இதுவே உனது அன்புக்கு அறிகுறி—நான் நன்கு அறிவேன், எனது இதயம் நிறைந்த காதலனே-இலைகளின் மேல் விளையாடும் இந்த ஒளி, விண்ணில் மெல்ல மெல்ல ஊர்ந்து செல்லும் மேகங்கள், என் முகத்தில் குளிர்ந்த சுகமளிக்கும் இந்த மென்காற்று, இவை அனைத்தும் உன் அருளேயாம்.

காலைக் கதிரொளி என் கண்களை நிறைத்தது. இதுவே எனது இதயத்திற்கு வந்த உனது செய்தியாகும். உன் முகம் மேலிருந்து கீழே கவிந்திருக்கிறது; உன் கண்கள் என் கண்களைச் சந்திக்கின்றன. எனது இதயம் உனது பாதத்தைத் தொட்டுவிட்டது.

## 60

முடிவற்ற உலகங்களின் கடற்கரையில் குழந்தைகள் சந்திக்கின்றன. அகண்ட ஆகாசம் தலைக்கு மேல் அசைவற்று நிற்கின்றது. ஓய்வற்ற கடல் கர்ஜிக்கிறது. முடிவற்ற உலகங்களின் கடற்கரையில், குழந்தைகள் சந்தித்துக் கூக்குரலிட்டுக் களிநடம் புரிகின்றன.

குழந்தைகள் மணலால் வீடு கட்டிக் காலிச் சிப்பிகளைக் கொண்டு விளையாடுகின்றன. உதிர்ந்த இலைச்சருகுகளால் படகு செய்து, ஆழம் மிகுந்த சாகரத்தின் மீது படகுகளை மிதக்கவிட்டுச் சிரித்து விளையாடுகின்றன. உலகங்களின் கடற்கரையில் குழந்தைகள் விளையாடுகின்றன.

குழந்தைகளுக்கு நீந்தத் தெரியாது. வலை வீசவும் தெரியாது. முத்துக் குளிப்பவர்கள் முத்துக்காக மூழ்குகிறார்கள், வியாபாரிகள் கப்பலில் பிரயாணம் செய்கிறார்கள், ஆனால் குழந்தைகள் கூழாங் கற்களைச் சேகரித்து மீண்டும் சிதறடிக்கின்றன. புதை பொருளாய் மறைந்து கிடக்கும் செல்வங்களைக் குழந்தைகள் தேடவில்லை, அவைகள் வலை வீசவும் பழகவில்லை.

கடல் ஆனந்தத்துடன் கொந்தளிக்கிறது. கடற்கரை புன்முறுவல் பூத்து மின்னுகிறது. மரணம் விளைக்கும் அலைகள் அர்த்தமற்ற பாடல்களைக் குழந்தைகளின் காதில் முழக்குகின்றன ; இந்தப் பாடல்கள் தொட்டிலாட்டும் தாயின் தாலாட்டுப் போன்றவையே. கடல் குழந்தைகளுடன் விளையாடுகிறது. கடற்கரை புன்முறுவல் பூத்து மின்னுகிறது.

முடிவற்ற உலகங்களின் கடற்கரையில், குழந்தைகள் விளையாடுகின்றன. வழியற்ற விண்ணில் புயல் அலைகிறது. பாதையற்ற கடலில் கப்பல்கள் மோதி உடைகின்றன; மரணம் ஓடி அலைகிறது. குழந்தைகள் விளையாடுகின்றன. முடிவற்ற உலகங்களின் கடற்கரையில், குழந்தைகளின் பெரிய சந்திப்பு நிகழ்கின்றது.

## 61

குழந்தையின் கண்களில் தவழும் தூக்கம் எங்கிருந்து வருகிறது, யாருக்காவது தெரியுமா? மின்மினிகள் பிரகாசிக்கும் நிழல் நிறைந்த கானகத்தின் நடுவிலுள்ள ஒரு கிராமத்தில், இரண்டு மாய மொட்டுக்கள் தொங்கிக்கொண்டிருக்கின்றன; இவைகளிலிருந்துதான் தூக்கம் பிறக்கிறதென்று வதந்தி. அங்கிருந்துதான் தூக்கம் குழந்தையின் கண்களைக் கொஞ்ச வருகிறது!

குழந்தை தூங்கும்போது அதன் உதடுகளில் மின்னும் சிரிப்பு எங்கிருந்து வருகிறது! யாருக்காவது தெரியுமா? ஆம், ஒரு பிறைச் சந்திரனின் வெண்மையான இள வெண் கிரணம், இலையுதிர்காலத்தில், மறையும் ஒரு மேகத் திரையின் முனை

யைத் தொட்டு காலைப் பனியிற் குளித்த கனவில் தோன்றியது அந்தப் புன்முறுவல்—, என்றொரு வதந்தி பரவி வருகிறது — குழந்தையின் உதடுகளில் தவழ்ந்து விளையாடும் புன்முறுவல்!

குழந்தையின் அவயவங்களில் மலர்ந்து ஜொலிக்கும் மெல்லிய இனிய புதுமை— இது இந்நாள் வரை எங்கே ஒளிந்திருந்தது, யாருக்காவது தெரியுமா? ஆம், குழந்தையின் தாய் ஒரு சிறு பெண்ணாயிருக்கும்போது, அது காதலின் மௌன விந்தையாக அவளுடைய இதயத்தில் உறங்கிப் பரவிக்கிடந்தது—சிசுவின் உடலில் மலர்ந்து கிடக்கும் இனிய மெல்லிய புதுமை வெள்ளம்!

62

எனது குழந்தாய், நான் உனக்கு வர்ணம் தீட்டிய பொம்மைகள் கொண்டு வரும்போது, மேகங்களிலும் நீரிலும் வர்ணஜாலங்கள் விளையாடுவதன் காரணத்தையும் புஷ்பங்களில் வர்ணங்கள் தீட்டப்பட்டிருப்பதின் காரணத்தையும் உணர்கின்றேன்.

நீ ஆடவேண்டும் என்பதற்காக நான் பாடும்பொழுது, இலைகளின் சலசலப்பில்

இசை அமைந்திருக்கும் காரணத்தையும், பூமி தேவியின் இதயத்தில் ஒலிக்கும் வண்ணம் கடல் அலைகள் ஒன்று சேர்ந்து இசைப்பதன் காரணத்தையும் நான் உண்மையாக அறிந்துகொள்கிறேன்.

நீ ஆவலோடு நீட்டியுள்ள கைகளுக்கு நான் இனிமையான தின்பண்டங்கள் கொண்டு வரும்பொழுது, பூக் கிண்ணத்தில் தேன் நிறைந்திருப்பதற்கும், கனி வர்க்கங்களில் இனிய ரசம் இரகசியமாய் நிரம்பி வருவதற்கும் என்ன காரணம் என்பதை நான் உண்மையாகவே அறிந்து கொள்கிறேன்.

உன்னைச் சிரிக்கவைக்க நான் உன் முகத்தில் முத்தமிடும்போது, விண்ணிலிருந்து காலை ஒளி மின்னிப் பீறிட்டு வரும் இன்பத்தையும், வேனில் காற்று என் உடலுக்கு அளிக்கும் இன்பத்தையும் நான் நன்கு உணர்கிறேன்.

63

நான் அறியாத நண்பர்களை நீ எனக்குப் பழக்கம் செய்து வைத்திருக்கிறாய். எனக்குச் சொந்தமில்லாத வீடுகளில், நீ எனக்கு ஆசனம் அளித்திருக்கிறாய். தூரத்திலுள்ளவரை அண்டையில்

கொணர்ந்து சேர்த்திருக்கிருய்; அறிமுக மில்லாதவனைச் சகோதரனுகச் செய்திருக் கிருய்.

பழக்கமாக நான் இருந்த இடத்தை விட்டுப் போக, நான் மன அமைதியற்று நிற்கிறேன்; புதுமையில் பழமையும் அதிலே நீயும் உறைகின்ருய், என்பதையும் நான் மறந்தே விடுகிறேன்.

பிறப்பு இறப்பின் மூலம், இந்த உலகிலோ அல்லது வேறு உலகங்களிலோ, எங்கு என்னை நீ அழைத்துச் சென்ருலும், அந்தச் சக்தியாகிய நீ புதுமையில் எனது இதயத்தை இணைத்து எனது முடிவற்ற வாழ்க்கையின் ஒரே துணைவனுக விளங்குகின்ருய்.

உன்னை அறிந்த ஒருவனுக்கு எவரும் அந்நியரல்லர். எக்கதவும் திறந்தே கிடக்கிறது. பல பிணைப்புக்களில் மிளிரும் ஒப்பற்ற ஒரே இன்பமாகிய உன்னை ஒரு போதும் இழந்துவிடா வண்ணம் எனக்கு அருள்புரிவாயாக!

64

தனியானதோர் ஆற்றங் கரையின் அமைதியில் நீண்ட நாணல்களின் மத்தி

யில் நான் அவளைக் கேட்டேன்: "மாதே, உனது விளக்கைத் திரையிட்டுக் கொண்டு எங்கே செல்லுகின்றாய்? எனது இல்லமெலாம் இருண்டு தனிமையில் கிடக்கிறது. எனக்கு உனது விளக்கை கொடு." அவள் தனது கருவிழிகளை உயர்த்தி, அந்தி இருளில் என் முகத்தை உற்று நோக்கினாள். "சூரியன் மேற்கே மங்கி மறையும்போது, ஆற்றில் என் விளக்கை மிதக்க விடவே நான் ஆற்றிற்கு வந்திருக்கிறேன்." என்று அவள் பதிலிறுத்தாள். நீண்ட நாணல்களின் மத்தியில் நின்றுகொண்டு, மங்கலான சுடருடன் அவளுடைய விளக்கு வெள்ளத்தின் மீது பயனின்றி மிதந்தோடுவதைக் கூர்ந்து கவனித்தேன்.

குவியும் இரவின் மௌன அமைதியில் நான் கேட்டேன்: "மாதே, உன் விளக்குகள் யாவும் ஏற்றப்பட்டன—இன்னும் உனதுவிளக்குடன் எங்குசெல்லுகின்றாய்? எனது வீடு விளக்கற்று இருண்டு கிடக்கிறது. உனது விளக்கை இரவல் கொடு." என் வார்த்தையைக் கேட்டதும், என் முகத்தின் பால் அவளுடைய கருவிழிகளை உயர்த்தி, ஒரு நிமிஷம் ஐயமுற்று நின்றாள். "எனது விளக்கை விண்ணிற்கு அர்ப்பணிக்கவே நான் வந்திருக்கிறேன்"

என்று பதிலளித்தாள். நான் நின்று கவனித்தேன். அவளுடைய வெளிச்சம் வெட்ட வெளியில் பயனற்று எரிந்து கொண்டிருந்தது.

மதியின் ஒளி முகம் காணாத நள்ளிருளில், நான் அவளைக் கேட்டேன், "மாதே, விளக்கை உன் இதயத்தினருகே பிடித்துக் கொண்டு, எதைத்தேடுகிறாய்? என் வீடு தனிமையில் இருண்டு கிடக்கிறது—, எனக்கு உனது வெளிச்சதைக் கொடு" ஒரு நிமிஷம் நின்று சிந்தித்து, இரவில் என் முகத்தை உற்று நோக்கிக் கூறினாள்: "ஒளி விழாவைக் கொண்டாடவே, நான் எனது விளக்கைக் கொண்டு வந்திருக்கிறேன்." நான் நின்று கவனித்தேன், அவளுடைய சிறு விளக்கு, வெளிச்சங்களின் மத்தியில் பயனற்று மறைந்தது.

65

என் தெய்வமே, பொங்கி வழியும் என் வாழ்வுக் கிண்ணியிலிருந்து உனக்கு எத்தகைய அமிழ்தம் வேண்டும்?

எனது கவியரசே! உன் சிருஷ்டி விநோதங்களை என் கண்களைக்கொண்டு பார்ப்பதும், நீ இசைக்கும் நித்தியமான அமுத கீதத்தையே என் செவிகளுள்

அமர்ந்து கேட்பதுமே உனக்கு இன்பமா யுளதோ?

என் உள்ளத்திலே உலகம் சொற்களை மாலையாக நெய்கிறது. உனது ஆனந்தம் அச்சொற்களுக்கு இசை யூட்டுகின்றது. காதலினால் நீ உன்னையே எனக்குத் தத்தம் செய்து விடுகின்றாய்; பின்னர் என்னகத்தே உன் இனிமை முழுவதையும் நிறைந்திருக்கக் காண்கிறாய்.

66

பரம்பொருளே! இவளே உனக்கு நான் அளிக்கும் கடைசிப் பரிசு—இவள் என் உயிருள் உயிராக என்றும் உறைந்தவள்; என்னுள் ஒளி மயமாகத் திகழ்ந்தவள்; காலை இளங்கதிர்கள் வீசும்போது, இவள் தன் முகத்திரையை அகற்றியதே யில்லை, இவளை உறுதியான என் இன்ப இசை கொண்டு போர்த்தி, உனக்குக் காணிக்கை யாகச் சமர்ப்பிக்கிறேன்.

எத்தனையோ சொற்கள் அவளைக் கெஞ்சி இறைஞ்சினும் அவள் இணங்க வில்லை; எவ்வளவு தூண்டினாலும் அவள் உள்ளம் திரும்பவில்லை.

என் இதயத்தின் ஆழத்தில் அவளை அணிந்துகொண்டு, தேசம் தேசமாக நான்

அலைந்திருக்கிறேன்; அவளைச் சுற்றியே என் வாழ்க்கை வளர்ந்தும் தேய்ந்தும் வந்திருக்கிறது.

என் எண்ணங்களிலும் செயல்களிலும், தூக்கங்களிலும், கனவுகளிலும், அவளே நிறைந்த ஆட்சி புரிந்து வந்தாள். எனினும், அவள் எதிலும் ஒட்டாமல் ஏகாந்தமாக ஒதுங்கியே இருந்தாள்.

அவளை மணம் பேசுவதற்காக என் தலைவாயில் வந்து தட்டிய மனிதர் எண்ணற்றோர். எல்லோரும் ஏமாந்து வந்த வழியே மீண்டு சென்றனர்.

இந்த உலகில் மானிடர் யாரும் அவள் மதி முகத்தைக் கண்டதில்லை. நீயே ஏற்று அருளவேண்டும் என்று என் கன்னி தனிமையில் தவம் கிடக்கிறாள்.

67

நீயே ஆகாசம், நீயே கூடு.

என் அழகனே! கூட்டினுள்ளே ஆத்மாவை வர்ணங்களாலும், சப்தங்களாலும், வாசனைகளாலும் வளைத்துக்கொள்ளுவதும் உனது அன்பே!

காலையாகிய கன்னி, பூமிதேவிக்குச் சூட்டவேண்டிய அழகென்னும் மலர்மாலையுடன் பொன் மயமான குடலையை வலக் கரத்தில் தாங்கிய வண்ணம் வந்து நிற்கிருள்.

அந்தி மாலையில், ஆடுகளும் மாடுகளும் வீடு திரும்பிச் சென்றபின், புல் நிறைந்த பல வெளிகளைக் கடந்து, சுவடு தெரியாத பல பாதைகளின் வெளியே, சந்தியாதேவியும் வருகிருள். மேலைக் கடலிலிருந்து அவள் தன் பொற்குடத்தில் குளிர்ந்த சாந்தி நீரை மொண்டு வந்து வையமெல்லாம் வீசுகிருள்.

ஆனல் ஜீவன் சிறகடித்துப் பறக்க வேண்டிய எல்லையற்ற வான வெளியோ ஒளிமயமாகத் திகழ்கிறது. அங்கே பகலில்லை, இரவில்லை, உருவில்லை, நிறமில்லை, ஒலிக்கின்ற சொல் ஒன்றுகூட இல்லை.

68

என் கண்ணீரையும், ஏக்கத்தையும், கீதங்களையும், மேகங்களாக மாற்றி உன் திருவடிகளில் கொண்டு சேர்ப்பதற்காக, சூரியனின் பொற்கிரணம் நான் இருக்கும் இந்த மண்ணுலகில் வந்து என் வீட்டு வாயிலில் கைநீட்டிக் காத்திருக்கிறது.

நீ அருமையான ஆனந்தத்துடன், தாரகைகள் பொருந்திய உன் தடமார்பில், மங்கலான அந்த மேகங்களாலாகிய துணியைப் போர்த்திக் கொள்கிறாய்; மேகங்கள் எண்ணற்ற தோற்றங்கள் அளிக்கவும், எத்தனை எத்தனையோ விதமாக மாறும் வர்ணங்களுடன் ஜொலிக்கவும் நீ செய்து விடுகிறாய்.

ஏ மாசற்ற ஜோதியே! மேகம் நீ விரும்பும் அளவுக்கு அத்தனை மென்மையாகவும், பறந்து திரிவதாகவும், அருமையானதாகவும், கண்ணீர் நிறைந்தும், கறுத்தும் இருக்கிறது. அதனால்தான் பயங்கரமான உன் ஜோதி வெள்ளத்தை, இரங்கத் தகுந்த அதன் நிழல்கள் மூடி மறைக்கின்றன.

69

இரவும் பகலும் என் நரம்புகளில் ஓடும் ஜீவனாகிய நதியே இந்த உலகினூடும் ஓடிப் பெருகி இசையோடு நடம் புரிகின்றது.

பூமியில் மண்மீது பல்கோடிப் புல்லிதழ்களினூடே களிப்புடன் துளிர்த்து நிற்பதும், அலை அலையான தளிர்களாகவும்

மலர்களாகவும் விரிந்து கொழித்துப் பரவுவதும் அதே ஜீவனைத் தவிர வேறில்லை.

ஜனன மரணம் என்னும் சாகரத் தொட்டிலில் அலைக்கப்படுவதும் அந்த ஜீவன்தான்; வெள்ளமாகப் பெருகி வெறுமையாக வறண்டு மாறுவதும் அதுவேதான்.

இந்த உயிரின் தீண்டுகையால் என் அங்கங்களெல்லாம் மாட்சி பெற்று இலங்குவதாக நான் உணர்கிறேன். இந்தக் கணத்தில் என் உதிரத்தில் நடனம் புரிவது, யுகம் யுகமாகத் தொடர்ந்து வரும் உயிர்த் துடிப்பே என்பதில் நான் மட்டற்ற பெருமை யடைகிறேன்.

70

இந்த இசை இன்பத்தைக் கொண்டே இன்பமடைவது உன்னால் இயலாததா? பயங்கரமான இந்த ஆனந்த லாகிரியில் மிதந்து, அலைந்து திரிந்து, அமிழ்ந்து விடுவது உன்னால் இயலாததா?

எல்லாப் பொருள்களும் ஓடிக்கொண்டே இருக்கின்றன, நிற்கவே இல்லை. பின்புறம் திரும்பிப்பார்க்க வில்லை. ஒரு சக்தியும் அவைகளை நிறுத்தவே முடியாது. அவைகள் ஓடிக்கொண்டே இருக்கின்றன.

ஓய்வற்று ஒலிக்கும் அந்த இசையினைத் தொடர்ந்து, பருவ காலங்கள் ஆடிக் கொண்டே வந்து அப்பால் மறைகின்றன-எத்தனை வர்ணங்கள், இசைகள், பரிமளங்கள் பொழிந்து பெருகுகின்றன-ஒவ்வொரு கணமும், முடிவில்லாத ஆனந்த அருவிகளாகப் பொழிந்து சிதறி மறைந்து ஒழிகின்றன.

71

நான் என்னையே பெரிதாக நினைத்து, உனது ஜோதியின்பால் எனது வர்ண நிழல்களை வீசிக்கொண்டிருக்கிறேன்— இதுவே உனது மாயை

அகண்டமான உன் திருமேனியில் ஒரு பாகத்தைத் தனியாக மதித்து, அதைக் கோடிப் பெயர்களால் அழைக்கிருய்; பிரிவுண்ட உன் அம்சமே நான்.

உருக்கமான கீதம், ஆகாசம் முழுதும் பல வர்ணமான கண்ணீர்த்துளிகளாகவும் முறுவல்களாகவும், நடுக்கங்களாகவும், நம்பிக்கைகளாகவும் எதிரொலி செய்கின்றது; அலைகள் உயர்ந்து மீண்டும் தாழ்கின்றன; கனவுகள் சிதைந்து மீண்டும் உருவெடுக்கின்றன. என்னுட் காண்பதும் உனது தோல்வித் தோற்றமே!

நீ விரித்திருக்கும் மாயையாகிய இத் திரையில், பகல் இரவு என்னும் தூரியங் களால் எண்ணற்ற சித்திரங்கள் எழுதப் பெற்றிருக்கின்றன. இந்தத் திரைக்குப் பின்னால் மாயைகள் சூழ நீ மறைந்திருக் கிறாய். திரைக்குப்பின், உன் இருக்கை விந்தை விளைவுகளால் நெய்யப்பட்டு,காலி நேர் கோடுகள் மறைந்து ஒழிகின்றன.

நீயும் நானும் இணைந்த காட்சி ஆகாசம் முழுதும் நிறைந்திருக்கிறது. நீயும் நானும் கலந்து பாடும் கீதம் காற்றில் குமுறிக் கொண்டு வருகிறது. நாம் ஒருவரை யொருவர் தேடிப் பிடித்துக்கொண்டு அலை வதில் பல யுகங்கள் கழிந்து ஒழிகின்றன.

72

என் உள்ளத்தான் அவனே, அவனே மறைவான தன் ஆழ்ந்த ஸ்பரிசத்தால் என் உயிரை ஜ்வாலை செய்கிறான் !

என் கண்களை மயக்குபவனும் அவனே, என் இதயத்தில் இன்ப துன்பமான கீதங் களை எழுப்பி விளையாடுபவனும் அவனே !

பொன்னிறமாகவும், வெள்ளி நிறமாக வும், நீலமாகவும், பச்சையாகவும், கணந் தோறும் நிறம் மாறி ஒளிரும் இந்த

மாயைத் திரையை நெய்பவன் அவனே. அத்திரையின் மடிப்புக்களின் அடியில்தன் திருவடிகளைக் காட்டி நம்மை ஆட்கொள்பவனும் அவனே. அவன் தீண்டியதும் நான் என்னையே மறந்து விடுகிறேன்.

நாட்கள் வந்து போகின்றன, யுகங்கள் ஓடி மறைகின்றன. எக்காலத்தும் எத்தனையோ ரூபங்களில், எத்தனையோ இன்ப துன்பக் கிளர்ச்சிகளில், என் இதயத்தைக் கசிந்து உருகச் செய்பவன் அவனேயாம்.

73

துறவறத்தில் எனக்கு விடுதலையில்லை. ஆயிரம் இன்பத் தளைகளிலேயே, விடுதலையின் ஸ்பரிசத்தை நான் அநுபவிக்கிறேன்.

இந்த மண் பாண்டம் ததும்பி வழியும் படி எனக்காக நீ எப்பொழுதும் இனிய மதுவைப் பெய்துகொண்டே யிருக்கிருய். மதுவும் பல வர்ணங்களும் வாசனைகளும் பொருந்திப் புதுமை மணக்கிறது.

எனது உலகம் உனது சுடரைக் கொண்டே பல நூறு விளக்குகளை ஏற்றி, உனது கோயிலின் பூஜைப் பீடத்தில் அமைக்கும்.

இல்லை, எனது புலன்களின் கதவுகளை நான் ஒருபோதும் தாளிடமாட்டேன். பார்வையும் கேள்வியும், ஸ்பரிசமும் அளிக்கும் இன்பங்களில், உனது இன்பமே நிறைந்திருக்கும்.

ஆம், என் மாயைகளெல்லாம் இன்ப ஜோதியாக மாறி, என் ஆசைகளெல்லாம் அன்புக் கனிகளாகப் பழுக்கட்டும்.

74

பகல் கழிந்தது, பூமியின் மீது நிழல் கவிந்திருக்கிறது. தண்ணீர் கொண்டுவர நான் எனது மண் குடத்தை எடுத்துக் கொண்டு ஆற்றுக்குச் செல்ல நேரம் வந்துவிட்டது.

அந்திக் காற்று நீரின் சோக கீதத்துடன் நிறைந்திருக்கிறது. ஆ, அது என்னை இந்த அந்தி இருளில் அழைக்கிறது. தனிமையான சந்திலே ஆளரவமேயில்லை, காற்று வேகமாக வீசுகிறது, ஆற்றிலோ அலைகள் அலறுகின்றன.

நான் வீடு திரும்புவேனோ என்று ஐயுறுகிறேன். யாரைச் சந்திக்க நேரிடும் என்பதும் எனக்குத் தெரியவில்லை. அங்கே ஒடுக்கமான ஆற்றோரத்திலே, அந்தச்

சிறு படகில் அமர்ந்துகொண்டு நான் பார்த்தறியாத அந்தப் புது மனிதன் தன் புல்லாங்குழலை வாசிக்கிறான்.

75

அநித்தியமான மானிடராகிய எங்களுக்கு நீ அளிக்கும் கொடைகள், எங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்துவிட்டுக் குறையாமல் உன்னிடமே திரும்பி வருகின்றன.

ஆறு தன்னுடைய நித்திய வேலையைச் செய்கின்றது. கழனிகளின் வழியாயும் கிராமங்களின் வழியாயும் வேகமாய் ஓடுகிறது. ஆனால் இடையறாது அதன் வெள்ளம் இறுதியில் உன் திருவடிகளைக் கழுவவே ஓடி வருகிறது.

பூ, தன் மணத்தால் காற்றை இனிமையாக்குகிறது. ஆனால் இறுதியில் தன்னையே உனக்கே அர்ப்பணிக்கிறது.

உன்னைப் பூஜிப்பதால், உலகம் குறைவடையவில்லை, வறுமையடையவில்லை.

கவிஞனின் சொற்களினின்று, மனிதர்கள் தமக்கு இஷ்டமான பொருள்களைக் கொள்ளுகிறார்கள், ஆனால் அச்சொற்

களின் இறுதிப் பொருள் உன்னையே சுட்டிக் குறிக்கின்றது.

76

என் உயிர்க்கு இறைவனே! நாள்தோறும் உன் எதிரே முகத்தோடு முகம் பார்த்து நான் நின்று வரலாமா? அண்டங்கள் அனைத்திற்கும் அதிபதியே! உன் எதிரில், கைகட்டி, முகத்தோடு முகம் பார்த்து நின்று வரலாமா?

உன் மாபெரும் வானத்தின் கீழ், தனிமையாகவும் அமைதியாகவும் அடக்கமான இதயத்துடனும் உன் எதிரில் முகத்தோடு முகம் பார்த்து நின்று வரலாமா?

வேலைமிகுந்த இவ்வுலகில், உழைத்துக் களைத்துப் போராடிக் கொந்தளிக்கும் இவ்வுலகில், தலை தெரிக்க ஒடிச்சாடும் கூட்டங்களின் நடுவே உன் எதிரே முகத்தோடு முகம் பார்த்து நின்று வரலாமா?

அரசர்க்கரசே, இவ்வுலகில் நான் வந்த வேலை முடிந்தவுடன், மௌனமாகத் தனித்து வந்து உன் எதிரில் முகத்தோடு முகம் பார்த்து நின்று வரலாமா?

77

உன்னை நான் என் தெய்வமென்றே அறிந்து ஒதுங்கி நிற்கின்றேன்—நீ

எனக்கே சொந்தமானவன் என்று உண ராததால், உன் அண்டையில் நான் நெருங்கி வரவில்லை. உன்னை நான் என் தந்தையென்றே அறிந்து உன் திரு வடிகளின் முன்பு தலை வணங்குகிறேன்— உன்னை நண்பனாகக் கொண்டு உன் கையைப் பற்றிக்கொள்ள நான் துணிய வில்லை.

எந்த இடத்தில் நீ இறங்கிவந்து, நீயே நான் என்று ஏற்றருள்வாயோ, எங்கு உன்னை என் இதயமாரத் தழுவி என் தோழனாகக் கொள்ள முடியுமோ, அங்கு நான் நிற்கமுடியவில்லை.

எனது சகோதரர்களின் மத்தியில், நீயே ஒப்பற்ற சகோதரன், ஆனால் நான் அவர்களைக் கவனிப்பதுமில்லை, என் வரு வாயை அவர்களுடன் பகிர்ந்துகொள்வ துமில்லை. என் செல்வம் அனைத்தையும் உன்னுடனே கலந்து அநுபவிக்கிறேன்.

இன்பதுன்பத்தில் நான் மானிடர் பக் கத்தில் நிற்பதில்லை. உன் அருகேயே நிற் கின்றேன். நான் என் உயிரை இழந்து விடத் தயங்குகின்றேன். அதனாலேயே வாழ்வுப் பொருங்கடலில் இன்னும் நான் மூழ்கவில்லை.

78

சிருஷ்டியின் புதுமையில் எல்லா நட்சத்திரங்களும் முதற் சோதியில் மின்னும் போது, தேவர்கள் ஆகாச மண்டலத்தில் கூடி, "இதுவே பூரணத்தின் பொலிவு, இதுவே கலப்பற்ற இன்பம்!" என்று பாடினார்கள்.

ஆனால் ஒருவர் திடீரென்று சொன்னார்: "எங்கோ ஒளிச் சங்கிலியில் ஒரு வெடிப்பிருக்கிறது, அந்த இடத்திலுள்ள ஒரு நட்சத்திரத்தை இழந்துவிட்டோம்."

அவர்களுடைய யாழின் தங்கத் தந்தி அறுந்தது. அவர்கள் பாட்டும் நின்றது, அவர்கள் துயரத்துடன் கூவினார்கள: "ஆம் அந்த இழந்த நட்சத்திரமே தலை சிறந்தது. அதுவே வானத்தின் மாட்சியாக ஜொலித்து வந்தது!"

அன்று முதல் அந்த நட்சத்திரத்தை இடைவிடாது தேடி வருகிறார்கள். அதை இழந்த உலகம் தன் ஒரே இன்பத்தை இழந்துவிட்டது என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டே இருக்கின்றனர்.

இரவின் ஆழ்ந்த மௌன அமைதியில், நட்சத்திரங்கள் மட்டும் தமக்குள் சிரித்து

இரகசியம் பேசிக்கொள்கின்றன, "இதைத் தேடுவது வீணனவேலை! வடுப் படாத பூர்ணத்துவம் எல்லாரிடத்தும் உண்டு."

79

என்னுடைய இந்தப் பிறவியில் உன்னைத் தரிசிக்கும் பேறு எனக்கு இல்லையெனில், நான் உனது கடாட்சத்தை இழந்து விட்டேன் என்பதை எந்நாளும் உணரும்படி அருள் செய்வாய்—ஒரு கண மேனும் மறந்து விடாமல் இந்தச் சோகத்தின் வேதனைத் துடிப்புகளை என் கனவிலும் நனவிலும் சிந்தையில் தேக்கி வைக்க நீ அருளல் வெண்டும்.

இவ்வுலகத்தின் சந்தை இரைச்சலில் எனது வாழ்நாள் கழிந்து செல்லும் பொழுதும், நாள்தோறும் செல்வங்கள் என் கைகள் நிறையச் சேரும் பொழுதும், நான் தேடியவை யாவும் பயனற்றவை என்பதை நான் எப்போதும் உணரச்செய் வாயாக—ஒரு கணமேனும் மறந்து விடாமல் இந்தச்சோகத்தின் வேதனைத் துடிப்புகளை என் கனவிலும் நனவிலும் சிந்தையில் தேக்கி வைக்க நீ அருளல் வேண்டும்.

சாலை ஓரத்திலே நான் களைத்துத் துடித்து அமர்ந்திருக்கையிலும், மண்ணில்

எந்தன் பாயை உதறி விரிக்கையிலும், இன்னும் நான் நெடுந்தூரம் யாத்திரை செய்யவேண்டும் என்ற எண்ணம் எப்போதும் என்னைவிட்டு அகலாதிருக்க ஒரு கணமேனும் மறந்துவிடாமல், இந்தச் சோகத்தின் வேதனைத் துடிப்புகளை என் கனவிலும் நனவிலும் சிந்தையில் தேக்கி வைக்க நீ அருளல் வேண்டும்.

என் அறையில் அலங்கரிக்கப்பட்டு, இன்பக் குழலிசையும் ஆனந்தச் சிரிப்பும் கலந்து கொழிக்கும்போது, இறைவா! உன்னை நான் என் வீட்டுக்கு அழைக்கவில்லை என்பதை நான் என்றும் உணர வேண்டும்—ஒரு கணமேனும் மறந்து விடாமல், இந்தச் சோகத்தின் வேதனைத் துடிப்புகளை என் கனவிலும் நனவிலும் சிந்தையில் தேக்கிவைக்க நீ அருளல் வேண்டும்.

80

ஓ, எனது ஜோதிச் சூரியனே! இலையுதிர்கால மேகச் சிதர் போல், நான் ஆகாசத்தில் அலைந்துகொண்டிருக்கிறேன். உனது ஸ்பரிசம் எனது ஆவியை இன்னும் உருக்கவில்லை; இன்னும் உனது ஒளியில்

நான் கலக்கவில்லை. உன்னை விட்டுப் பிரிந்திருக்கும் மாதங்களையும் வருஷங்களையும் எண்ணிக்கொண்டேயிருக்கிறேன்.

இதுவே உனது இச்சையானுல், இதுவே உனது லீலையுமானுல், எனது இந்த நிலையற்ற வெறுமையை எடுத்துக்கொண்டு, அதற்கு வர்ணம் தீட்டி முலாம்பூசி, அலையும் காற்றில் இதையும் மிதக்கவிட்டு, பல விந்தைகளின் நடுவே பறந்து திரியச் செய்வாயாக! இரவில் இந்த லீலையை முடிக்க உனக்குத்திருவுளமானுல், நான் உருகி இருளில் மறைந்துவிடுகிறேன்; அல்லது வெள்ளிமயமான காலைக்கதிரின் புன்முறுவலாகவோ, புனிதமாக ஒளிரும் குளிர்ச்சியாகவோ மறைந்துவிடுகிறேன்.

## 81

பல நாட்கள் நான் சோம்பலாயிருக்கும்போது, நான் இழந்த நேரத்தைப் பற்றி வருந்துவேன். ஆனுல் எனது ஈசனே, நேரத்தை நான் இழந்துவிடவில்லை. எனது வாழ்வின் ஒவ்வொரு நிமிஷமும், நீயே கைகளில் எடுத்துக் கொண்டிருக்கிருய்.

பொருள்களின் இதயத்தில் கரந்திருந்து, விதைகள் முளைகளாக முளைக்க

வும், அரும்புகள் மலர்களாக மலரவும், மலர்கள் கனிகளாகக் கனியவும் நீயே துணை செய்து நிற்கிருய்.

நான் களைத்துப் படுக்கையில் சோம்பிப் படுத்திருந்தேன், என் வேலை முடிந்து விட்டதாக எண்ணினேன்.

காலையில் நான் எழுந்ததும், எனது தோட்டம் முழுதும் அற்புதப் புஷ்பங்கள் அலர்ந்து நிறைந்திருக்கக்கண்டேன்.

82

எனது பிரபுவே, உன் கையில் காலம் எல்லையற்று வளர்கிறது. உன் நிமிஷங்களை எண்ண ஒருவருமில்லை.

பகல்களும் இரவுகளும் ஓடி மறைகின்றன. புஷ்பங்கள்போல் யுகங்கள் பூத்து உதிர்கின்றன. நெடுங்காலம் காத்திருக்கும் பொறுமையை நீ நன்ருக அறிவாய்.

அற்பமான ஒரு காட்டு மலரையும் செம்மைப்படுத்திப் பரிபூரண நிலைக்குக் கொண்டுவர, நீ எத்தனையோ நூற்ருண்டுகளைச் செலவிடுகிருய்.

ஆனல் எங்களுக்கோ, இழப்பதற்குரிய நேரமில்லை. நேரமின்மையால் நாங்கள்

கிடைக்கிற சந்தர்ப்பங்களை எட்டிப் பிடித்துக்கொள்ள வேண்டும். காலந்தாழ்த்தாமல், ஆத்திரத்தோடு முந்திக்கொள்ள வேண்டிய நிலையில் அத்தனை ஏழைகள் நாங்கள்.

காலம் ஓட, ஒவ்வொருவனும் குறை கூறிக்கொண்டு எனது நேரத்தை வீணுக்கவே வருகிருன், அதனுலேயே கடைசி வரை, உனது பூஜைப் பீடம் நைவேத்தியங்களின்றிக் காலியாகவே இருக்கிறது.

இன்றைய முடிவில், உனது கதவு மூடுவதற்கு முன்வரவேண்டுமே என்று பயந்து ஓடி வருகிறேன்! ஆனுல் வந்த பின், இன்னும் காலம் இருக்கிறதென்று காண்கிறேன்.

83

அன்னையே! சோகமான என் கண்ணீர்த் துளிகளால், உனது கழுத்துக்கு ஒரு முத்தாரம் தொடுக்கிறேன்,

உன் கால்களை அணி செய்ய, நட்சத்திரங்கள் தங்கள் ஒளிக் கொலுசுகள் தயாரித்துவிட்டன. ஆனுல் எனது முத்தாரம் உந்தன் மார்பிலே மின்னும்.

செல்வமும் புகழும் உன்னிடமிருந்தே வருகின்றன. அவைகளை அளிப்பதோ, மறுப்பதோ உனது உரிமையே. ஆனல் என்னுடைய இந்தச் சோகம் மட்டும் என் சொந்த உடைமை, நான் இதை உனக்கு என் காணிக்கையாகக் கொண்டு வரும் போது, நீ எனக்கு அருளைப் பரிசாக அளிக்கிருய்.

84

பிரிவின் துயரமே உலகத்தில் பரவிப் பாய்கிறது ; இதுவே எல்லையற்ற ஆகாசத்தில் எண்ணற்ற உருவங்களைத் தோற்று விக்கிறது.

இந்தப் பிரிவின் துக்கமே, இரவெல்லாம் நட்சத்திரங்களிலிருந்தும் மௌனமாக உற்று நோக்குகிறது ; இதுவே ஆடிமாதத்து மழையிருளில் இலைகளின் சலசலப்பின் நடுவே, இனிய கீதமாய் பரிணமிக்கிறது.

பொங்கிப் பரவும் இந்த வேதனையே, பிரேமைகளாகவும் ஆசைகளாகவும் கனிந்து, மானிடர் தம் வீடுகளில் இன்ப துன்பங்களாக மாறிவிடுகிறது ; இதுவே என் கவிதை உள்ளத்திலிருந்து பாடல்களாக உருகிப் பெருக்கெடுத்து ஓடு கின்றது.

85

போர் வீரர்கள் தங்கள் தலைவனின் மண்டபத்திலிருந்து வெளிவரும் போது, அவர்களுடைய ஆற்றல் எங்கு மறைந்திருந்தது ? அவர்களுடைய யுத்த கவசமும் ஆயுதங்களும் எங்கே கிடந்தன ?

துன்புற்றுத் துணையற்றுக் கிடந்த அவர்கள்மீது அவர்கள் தலைவனின் மண்டபத்திலிருந்து வெளிவந்த தினத்தில், அம்புகள் மழையாக வருஷிக்கப் பட்டன.

வீரர்கள் திரும்பவும் தலைவன் மண்டபத்திற்குத் திரும்பும் போது, அவர்களுடைய ஆற்றல் எங்கே மறைந்திருந்தது ?

வாளையும், வில்லையும், அம்பையும் அவர்கள் எறிந்துவிட்டார்கள் ; அவர்கள் நெற்றியில் சாந்தி திகழ்ந்தது ; தலைவன் மண்டபத்திற்குத் திரும்பும்போது, அவர்கள் வாழ்வின் வினைப்பயன்களாகிய கனிகளைப் பின்னுல் விட்டே சென்றுர்கள்.

86

உனது சேவகனை எமன் என் கதவண்டை வந்து நிற்கிறுன். யாருக்கும்

தெரியாத கடலினைத் தாண்டி உனது அழைப்பை என் வீட்டில் சேர்த்து விட்டான்.

இரவு இருண்டிருக்கிறது. என் இதயமும் பயமுறுகிறது — இருந்தாலும் விளக்கை எடுக்கிறேன், கதவைத் திறந்து அவனை வணங்கி வரவேற்கிறேன். எனது கதவண்டை நிற்பது உனது தூதனே!

கூப்பிய கரத்துடன், கண்ணீர் சிந்தி நான் அவனைப் பூஜிக்கிறேன். என்இதயப் பொக்கிஷத்தை அவன் திருவடியில் வைத்துப் பூஜிக்கிறேன்.

வந்த வேலை முடிந்ததும் அவன் திரும்பி விடுவான், காலைப் பொழுது விடிந்ததும் அவனது கருநிழல் மட்டும் என் முன் நிற்கும்; எனது பாழடைந்த வீட்டில் கடைசியில் உனக்குக் காணிக்கையாக அளிப்பதற்குத் தனியே துடித்துக் கொண்டிருக்கும் என் ஆத்மாவே எஞ்சியிருக்கும்.

87

நம்பிக்கை இழந்து, எனது அறையின் மூலைகளிலெல்லாம் அவளைத் தேடிப்பார்க்கிறேன். ஆனால் அவள் அகப்படவில்லை.

என் இல்லம் சிறிது, அதை விட்டு மறைந்தது திரும்பக் கிடைப்பது அரிது.

ஆனால் என் பிரபுவே, உனது மாளிகையோ எல்லையற்றது, அவளைத் தேடிக் கொண்டு உன் கதவண்டை வந்திருக்கிறேன்.

உனது அந்தி வானத்தின் தங்க விதானத்தின் அடியில் நான் நிற்கிறேன்; ஆர்வம் மிகுந்த என் கண்களால் உன் முகத்தை அண்ணாந்து பார்க்கிறேன்.

நித்தியத்தின் எல்லைக்கு நான் வந்து சேர்ந்திருக்கிறேன், இதிலிருந்து எதுவும் மறைந்தொழிய முடியாது — நம்பிக்கை மறையாது, இன்பம் ஒழியாது, கண்ணீரினூடே கண்ட முகமும் மறையாது.

வெறுமையான எனது வாழ்வை அந்தக் கடலில் தோய்த்து, பூர்ணத்துவம் என்ற ஆழத்தில் அமிழ்த்திவிடு. உலகமனைத்தும் ஏகமானது என்ற உணர்வை நான் இழந்து நிற்பது மாறி, மீண்டும் ஒரு முறையேனும் அதை நான் பெறுவதற்கு அருள்வாய்!

88

பாழடைந்த கோயிலில் வீற்றிருக்கும் தெய்வமே! வீணையின் அறுந்த கம்பிகள் இனியும் உனது புகழைப் பாடுவதில்லை.

அந்தி மாலையில் கண்டாமணிகள் உனது பூஜையைக் குறிப்பதில்லை. உன்னைச் சூழ்ந்துள்ள காற்றும் மௌனமாயும் அமைதியாயும் இருக்கிறது.

உனது பாழடைந்தகோயிலில், வசந்தக் காற்று அலைந்து உலாவுகிறது. அது பூக்களின் மணமான செய்திகளைக்கொண்டு வருகிறது—ஆனால் அந்தப் புஷ்பங்களோ உனது பூஜைக்கு அளிக்கப்படுவதில்லை.

உன்னை முன் பூஜித்தவன், தனக்கு அருளொளி கிடைக்கவில்லையே என்று நினைந்து நினைந்து அலைந்துதிரிகிருன். அந்தி வேளைகளில் அனல் ஜோதிகளும் இருள் நிழல்களும் புழுதியின் அந்த காரத்தில் கலக்கும்போது, இதயப் பசி யுடன் அவன் பாழடைந்த கோயிலுக்குப் பரிதாபமாய்த் திரும்பிவருகிருன்.

பாழடைந்த கோயிலில் வீற்றிருக்கும் தெய்வமே! உன் திருநாட்களெல்லாம் வெறுநாட்களாய் அமைதியில் கழிகின் றன; உன் பூஜைக்குரிய இரவுகள் பல, விளக்கேற்றவும் நாதியில்லாமலே கழிகின்றன.

கைதேர்ந்த சிற்பிகள் எத்தனையோ புது விக்ரகங்கள் வார்க்கின்றனர், ஆனல்

காலம் வரும்போது அவைகளையும் அழி வென்னும் புது வெள்ளம் அடித்துக் கொண்டு போகிறது.

பாழடைந்த கோயிலிலுள்ள மூர்த்தியே பூஜையின்றிக் கிடக்கின்றது; கொடிய அலட்சிய மனோபாவமே, பூஜைக்குத் தடையாக வந்துவிட்டது.

89

இனிமேல் என்னிடமிருந்து எதுவும் சொல் முழக்கமாக வெளிவராது. அதுவே எனது இறைவனின் ஆணை. நான் ரகசியமாகவே பேசுவேன். இனி எனது இதயஒலி, பாட்டாகவே ரீங்காரம்செய்யும்.

அரசன் சந்தைக்கு ஜனங்கள் ஓடுகிறார் கள். வாங்குவாரும் விற்பாரும் அங்கே குழுமியிருக்கிறார்கள். ஆனால் வேலையின் நெருக்கடியில், நடு வெயிலில், நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்.

பருவமில்லாவிடினும், புஷ்பங்கள் எனது தோட்டத்தில் மலர்ந்து விளங்கட் டும்; பகல் வண்டுகள் தங்கள் சோம்பல் ரீங்காரத்தைத் தொடங்கட்டும்.

நன்மை—தீமைப் போரில், நான் பல காலம் செலவிட்டிருக்கிறேன்; வெறுமை

யான இள வயதிலேயே என்னோடு விளை யாடிய தோழன் எனது இதயத்தைத் தன் னிடம் இழுக்கின்றான், எந்தப் பயனற்ற நிலைக்கு, இந்த அவசர அழைப்பு என்பது எனக்கு விளங்கவில்லை!

90

எமன் உன் கதவைத் தட்டும்போது நீ அவனுக்கு என்ன தருவாய்?

ஓ! எனது விருந்தினன் முன்பு, எனது வாழ்க்கை நிறைந்த பாண்டத்தையே வைப்பேன். அவனை வெறுங்கையுடன் திரும்ப விடமாட்டேன்.

என் அந்திய காலத்தில் எமன் வந்து கதவைத் தட்டும்போது, சரத் காலத்தி லும் வேனிற் காலத்திலும் நான் சேக ரித்த இனிய தேன் அத்தனையையும், ஓயாது வாழ் நாள் முழுதும் தேடிய என் செல்வம் அத்தனையையும் அவன் பாதங் களில் சமர்ப்பிப்பேன்.

91

மரணமே! வாழ்வு கடைசியில் உன் னிடம்தான் நிறைவெய்துகிறது. ஆத லால் என் மரணமே, என்னிடம் வந்து என் செவியில் ரகசியம் பேசுவாய்!

நாள்தோறும் உனக்காகவே காத்து வந்திருக்கிறேன்; உனக்காகவே வாழ்வின் இன்பங்களையும் வேதனைகளையும் தாங்கி வந்திருக்கிறேன்.

உன் இதய இரகசியத்தின் ஆழத்தில், என்னிடம் உள்ள யாவும், என் நம்பிக்கை அனைத்தும், என் காதல் அத்தனையும் உன்னையே நாடி ஓடிவந்து கொண்டிருக்கின்றன. உன் கண்களின் இறுதிப் பார்வையில், என் உயிர் உன்னுள் ஒன்றி உனதேயாகிவிடும்.

பூக்கள் தொடுக்கப்பெற்று மணமகனுக்கு மாலை தயாராக இருக்கிறது. திருமணம் முடிந்ததும் மணப் பெண் தன் இல்லம் துறந்து, தன் நாயகனை இரவின் அமைதியில் சந்திப்பாள்.

92

ஒருநாள் வரும், அன்று இவ்வுலகத்தைப் பார்த்து நிற்கும் என் கண்கள் மூடிவிடும். ஜீவன் என் கண்களுக்குத் திரையிட்டு விட்டு, மௌனமாகவே விடைபெற்றுக் கொண்டுவிடும்.

எனினும் நட்சத்திரங்கள் இரவில் விழித்துப் பார்க்கும், காலை முன்போல்

உதயமாகும். இன்ப துன்பங்களைச் சிதறிக் கொழிக்கும் கடல் அலைகள் போல் நாழிகைகள் விம்மியெழுந்து மறையும்.

என் வாழ்க்கை விஞடிகள் இப்படி முடிவுற்றதைச் சிந்திக்கும்பொழுது, விஞடிகளின் இடையே அவைகளைப் பிரித்து நின்ற தடை விலகிச் சிதறுகிறது. மரணத்தின் ஒளியைக் கொண்டு உனது உலகத்தில் கொள்ளை கொள்ளையாகக் கொட்டிக் கிடக்கும் செல்வங்களை நான் பார்க்க முடிகிறது. இந்த உலகில் மிகத் தாழ்வான நிலையும், மிகவும் அற்பமான உயிரும் கூட அபூர்வமான பெருமை யுள்ளவை என்று நான் காண்கிறேன்.

நான் வீணுக ஆசைப்பட்ட பொருள்களும் நான் அடைந்த பொருள்களும் எனக்கு இனித் தேவையில்லை. எப்பொழுதாவது நான் இகழ்ச்சியாகக் கருதிக்கவனியாது விட்டுள்ள பொருள்களை நான் உண்மையிலே அடையும்படி அருள் புரிவாயாக!

93

எனக்கு உத்திரவு பிறந்து விட்டது. சகோதரர்களே! போய்வருகிறேன்! உங்கள் அனைவரையும் வணங்கிவிட்டு நான் புறப்படுகிறேன்.

இங்கே என் வீட்டின் சாவிகளைத் திரும்பத் தருகிறேன்; இவ்வீட்டின்மீது எனக்குள்ள உரிமைகளையும் விட்டுவிடுகிறேன். உங்களது கடைசியான அன்பு மொழியையே வேண்டுகிறேன்.

நாம் நீண்ட நாள் நெருங்கிவாழ்ந்தோம், ஆனால் நாம் கொடுத்ததைவிட அடைந்ததே அதிகம். இப்பொழுது, பொழுது புலர்ந்துவிட்டது, எனது இருண்ட மூலையில் எரிந்துகொண்டிருந்த விளக்கும் அணைந்து விட்டது. எனக்கு அழைப்பு வந்துவிட்டதால், நான் யாத்திரைக்குத் தயாராக இருக்கிறேன்.

94

நண்பர்களே! நான் பிரியப்போகும் இந்த நேரத்தில் என்னை வாழ்த்தி அனுப்புங்கள்! வானத்தில் வைகறையின் ஒளி செறிந்து விளங்குகிறது. எனது பாதையும் அழகுடன் பொலிகிறது.

நான் என்னுடன் என்ன கொண்டு போகிறேன் என்று கேட்காதீர்கள். வெறுங்கையுடனும் ஆர்வ இதயத்துடனுமே என் யாத்திரை ஆரம்பமாகிறது.

நான் எனது திருமண மாலையை அணிந்துகொள்ளுகிறேன். எனது ஆடை பிரயாணியின் காஷாய உடையன்று. பாதையில் எவ்வித அபாயங்கள் இருந்த போதிலும், என் மனத்தில் எவ்வித பயமு மில்லை.

எனது யாத்திரை முடியும்போது, அந்தி நட்சத்திரம் எட்டிப்பார்க்கும்; அரசனின் அரண்மனையிலிருந்து அந்தி மாலையின் சோக கீதங்களின் இனிய கோஷம் பொழிந்துகொண்டிருக்கும்.

95

இந்த வாழ்க்கையின் வாசற்படியை நான் எப்போது தாண்டி வந்தேன் என்பது எனக்குத் தெரியாது!

நடுக்காட்டிலே நள்ளிருளிலே மலரும் பூ முகைபோல, எல்லையற்ற இந்த மாயையின் நடுவே என்னை விகசிக்கச் செய்த சக்தி எது?

காலை ஒளியினைக் கண்டபோது இந்த உலகத்திற்கு நான் அந்நியன் அல்லன் என்பதையும், நாமரூபமற்ற மர்மமான சக்தியே எனது அன்னையின் உருவத்தில் என்னைக் கைகளில் ஏந்திக்கொண்டிருப்பதாக ஒரு கணத்தினில் உணர்ந்தேன்.

அதே போல நான் அறியாத அதே சக்தி என்றுமே எனக்கு அறிமுகமான உருவத்தில் மீண்டும் தோன்றும். நான் இந்த வாழ்க்கையை விரும்பும் காரணத்தாலேயே, மரணத்தையும் நேசிக்கிறேன்.

குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாய், அதை வலது ஸ்தனத்திலிருந்து எடுத்தவுடன் குழந்தை வீரிட்டு அழுகிறது; மறுகணத்தில் இடது ஸ்தனத்தில் ஆருயிருக்கு அமிழ்தம் கிடைக்கும் என்பதை அது உணர்வதில்லை.

96

இங்கிருந்து நான் பிரியும்போது, நான் கண்ட காட்சி நிகரற்றது என்பதே என் கடைசி வார்த்தை.

ஒளிக்கடலில் மலர்ந்த இந்தத் தாமரையில் மறைந்திருந்த தேனைப் பருகி நான் இன்புற்றேன். இதனால் பாக்கியவானானேன். இதுவே என் கடைசி வார்த்தை.

எண்ணற்ற உருவங்கள் விளையாடும் இவ்வுலகில் எனது விளையாட்டு முடிந்தது. இங்கேயே உருவமற்ற பரம் பொருளை நான் கண்டுகொண்டேன்.

தீண்ட முடியாத பரம்பொருள் என் உடலையும் உறுப்புக்களையும் தீண்டியதால் தன்னை நினைவூட்டிச் சிலிர்க்கச் செய்து விட்டது. எனது முடிவும் இங்கேயே வருவதானல் வரட்டும் - இதுவே என் கடைசி வார்த்தை.

97

நான் உன்னுடன் விளையாடும்போது, நீ யாரென்று நான் கேட்கவில்லை. எனது வாழ்வின் இடிஓசையில், நாணத்தையும் பயத்தையும் நான் உணரவில்லை.

உற்ற நண்பனைப்போல, அதிகாலையில் என்னைத் தூக்கத்தினின்று எழுப்பி வனத்திற்கு வனம் ஓடி அழைத்துச் செல்லுவாய்.

அக் காலங்களில், நீ எனக்குப் பாடிய பாடல்களின் பொருளை அறிய வேண்டுமென்று நான் சிறிதும் ஆவலுறவில்லை. ஆனல் எனது குரலோ நீ பாடிய பண்களைப் பிடித்துக்கொண்டது. என் இதயமும் சப்த ஜாலங்களுக்கு ஏற்ப நடனம் புரிந்தது.

இப்போது விளையாட்டு நேரம் முடிந்து விட்டது. என் முன் திடீரென வரும்

இந்தக் காட்சி யாது? உன் திருவடிகளில் வைத்த கண்களுடன், உலகம் மௌன மாக மிளிரும் பல்லாயிரம் நட்சத்திரங்க ளுடன், பயபக்தியுடன், உனக்கு வணக்கம் செலுத்துகிறது.

98

நீ என்னை வென்றனை, எனது தோல் வியின் சின்னங்களையே மாலைகளாகச் சூட்டி உன்னை அலங்கரிக்கிறேன். தோல்வியைத் தவிர்க்கும் ஆற்றல் எனக்கு ஒருபோதும் இல்லை.

என் செருக்கு மண்ணினைக் கவ்வுமென் றும், என் ஜீவன் அளவற்ற வேதனை யுடன் தன் பந்தங்களைத் தகர்க்கு மென் றும், வெறுமையான என் இதயமும் வேய்ங்குழல் போல் இசைகொட்டி இரங்கு மென்றும் கல்லும் கண்ணீராய்க் கரைந் துருகு மென்றும் நான் நிச்சயமாக உணர் வேன்.

தாமரையின் நூறு இதழ்களும் எப்போ தும் மூடிய நிலையில் இராதென்றும் அத னுள் கரந்துறையும் தேன் வெளியாகிவிடு மென்றும் நான் நன்கு உணர்வேன்.

நீலவானிலிருந்து, ஒரு கண் என்னை உற்று நோக்கி என்னை அமைதியாக

அழைக்கும். யாவற்றையும் உதறிவிட்டு, உனது திருவடி நிழலிலே மரணத்தையே பெறுவேன்.

99

சுக்கானை நான் கைவிடும்போது, உடனே நீ அதைப் பிடித்துக் கொள்ளுகிறாய் என்பது எனக்குத் தெரியும்.செய்வன உடனே செய்து முடிவுறும். என் போராட்டம் வீணேயாகும்.

என் பேதை இதயமே! அமைதியாக உனது தோல்வியைப் பொறுத்து, உன் கைகளை எடுத்துவிடு; உனக்கு அமைந்த இடத்தில் பூரண அமைதியுடன் அமர்ந்திருப்பதே உன் பாக்கியம் என்று கருதுவாய்.

காற்றின் ஒவ்வொரு அதிர்ந்த சிறு மூச்சிலும், என் விளக்குகள் அணைந்து விடுகின்றன. மீண்டும் மீண்டும் அவைகளை ஏற்ற முயலும்போது, நான் மற்றவை அனைத்தையும் மறந்துவிடுகிறேன்.

ஆனால் இந்த முறை தரைமீது எனது பாயை விரித்துக்கொண்டு, சாதுரியமாக இருளிலேயே காத்திருப்பேன்; எனது பிரபுவே! நீ விரும்பும் போதெல்லாம்

அமைதியாக இங்கே வந்து அமர்ந்து கொள்ள வேண்டுவேன்.

100

உருவங்கள் நிறைந்த கடலின் ஆழத்தில் உருவற்ற பூரண முத்தினை அடையலாம் என நம்பி நான் மூழ்குகிறேன்.

காற்றில் நைந்த என் படகைக் கொண்டு இனிமேல் துறைமுகந்தோறும் அலைய முடியாது. அலைகளில் அலைபடும் நாட்கள் மலையேறிவிட்டன.

அமர வாழ்வினுள் நான் அழிந்து கலந்துவிடவே இப்பொழுது ஆவலுற்றுத் தவிக்கிறேன்.

ஆழம் மிகுந்த ஆழிகளுக்கு அப்பால் அமைந்துள்ள உன் கொலு மண்டபத்தில், நாதமற்ற தந்திகளின் நாதமெழுந்து இசை பரப்பவும், எளியேனும் என் ஜீவனாகிய யாழினை எடுத்துக் கொண்டு மீட்டுகிறேன்.

நித்தியமான பண்களே ஒலிக்கும்படி அதை மீட்டுகிறேன். அது உருகி உருகிப் புலம்பி முடிந்தபின், என் மௌன யாழினை மோன மூர்த்தியாகிய உன் திருவடி சேர்க்கிறேன்.

## 101

எனது வாழ்வு முழுதும் என் பாடல்களைக்கொண்டு உன்னைத் தேடி அலைந்தேன். என் பாசுரங்களே, எனக்கு வீடு வீடாகக்காட்டி, என்னைச் சூழ்ந்துள்ள உலகத்தையும் உற்றுணரத் துணை செய்தன.

நான் கற்ற உண்மைகள் யாவும் என் பாசுரங்கள் கற்பித்தவை. எனக்குப் பல இரகசியங்களையும் காட்டி எனது இதயத்தின் அடிவானத்தில் பல நட்சத்திரங்களையும் அவையே எனக்குப் புலப்படுத்தின.

பகலெல்லாம் இன்பமும் துன்பமும் நிறைந்த தேசத்தின் மர்மங்களின் வழியே, அவைகளே எனக்கு வழி காட்டி வந்தன. இறுதியில், அந்திவேளையில் எனது யாத்திரையின் முடிவில், எத்தகைய அரண்மனை வாயிலில் அவைகள் என்னைக் கொணர்ந்து சேர்த்து விட்டன ?

## 102

ஈசா, உன்னை நான் அறிந்திருப்பதாக, மானிடர் முன்பு பெருமை பேசினேன். என் கவிகள் அனைத்திலும் உன் சித்திரங்களையே அவர்கள் பார்க்கிறார்கள். "அவன்

யார்?" என்று அவர்கள் என்னிடம் வந்து கேட்கிருர்கள். அவர்களுக்கு எவ்வாறு பதிலிறுப்பதென்று எனக்குத் தெரியவில்லை.

"உண்மையாகவே என்னுல் சொல்ல முடியாது," என்று நான் சொல்லுகிறேன் என்னைக் குறைகூறி, அவர்கள் வெறுத்துச் செல்லுகிருர்கள். நீயோ சிரித்த வண்ணம் அங்கே அமர்ந்திருக்கிருய்.

உன்னைப்பற்றிய கதைகளை நான் அழியாப் பாசுரங்களில் அமைக்கிறேன். எனது இதயத்திலுள்ள இரகசியம் அனைத்தும் பீறிட்டுப் பாய்ந்து வருகிறது, "உன்னுடைய அர்த்தங்களை யெல்லாம் சொல்," என்று அவர்கள் என்னைக் கேட்கிருர்கள். அவர்களுக்குப் பதில் கூற என்னுல் முடியவில்லை. "அவைகளின் பொருளை யாரே அறிவர்!" என்று நான் சொல்லுகிறேன். புன்முறுவலுடன் வெறுத்துத் திரும்புகிருர்கள், ஜனங்கள். நீயோ சிரித்த வண்ணம் அங்கே அமர்ந்திருக்கிருய்.

103

எனது தெய்வமே, சரணுகதியாக, ஒரே பிரார்த்தனையில் என் புலன்கள் அனைத்தும் விரிந்து உனது திருவடியில் உள்ள

இந்த உலகத்தைத் தொட அருள் புரிவாயாக!

ஒரே பிரார்த்தனையில், மழை சுமந்து கவிந்து நிற்கும் ஆடிமாத மேகம்போல், எனது மனம் உனது கதவண்டை கவிந்து கிடக்கும்படி அருள்புரிவாயாக!

என் பாசுரங்கள் தம் பண்கள் யாவற்றையும் ஒன்ருகத் திரட்டி ஒரே வெள்ளமாக ஓடி, ஒரே பிரார்த்தனையாகச் சாந்திப் பெருங்கடலுள் கலக்கும்படி அருள் புரிவாயாக!

மலைமேலுள்ள கூடுகளை ஆவலுடன் தேடிப் பகலும் இரவும் பறந்தே செல்லும் கொக்குக் கூட்டம்போல், ஒரே பிரார்த்தனையில், எனது ஜீவன் தனது அழியாத ஜோதி இல்லம் தேடி யாத்திரை செய்ய அருள் புரிவாயாக!



General Editor—
V. R. M. CHETTIAR - B. A.

---

## விரைவில் வெளிவரும்

## தாகூர் நூல்கள்

| | | |
|---|---|---|
| காதற் பரிசு | ... | ரூ. 2–00 |
| சாதனை | ... | ரூ. 3–50 |



# செல்வி பதிப்பகத்தின்

## சுவையான புதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| **மா. இராசமாணிக்கனார்** | | |
| தமிழர் வாழ்வு | 1 | 25 |
| வழியும் வகையும் | 0 | 50 |
| **வ. சுப. மாணிக்கம்** | | |
| கொடை விளக்கு | 1 | 50 |
| **தமிழண்ணல்** | | |
| இலக்கியத்தில் இன்பச்சுவை | 2 | 50 |
| **இரா. சாரங்கபாணி** | | |
| திருக்குறள் உறைவேற்றுமை | 4 | 00 |
| **ஜனககுமாரி** | | |
| குழந்தைக்கு மருந்துகள் | 1 | 50 |
| **பெரி. சிவனடியான்** | | |
| வான்மதி | 1 | 00 |
| அவளுக்காக | 1 | 50 |
| **தாகூர்** | | |
| கீதாஞ்சலி | 1 | 50 |
| **ந. சுப்பு ரெட்டியார்** | | |
| கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி | 2 | 00 |

---